# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-களுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள் —அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூர்ண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக :
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

## திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®

# ஒரு சுற்று வந்து போவோம்...



எஸ். ஜானகிக்குப் பாராட்டு



பிரபஞ்சத்துக்கும் மாலை



மேடையில் மகேந்திரா பிரபு.

● 25 வருட காலமாகத் தலைசிறந்த பின்னணிப் பாடகியாக முன்னணியிலிருந்துவரும் எஸ். ஜானகியைப் பாராட்ட வருடப் பிறப்பன்று சென்னை தெலுங்கு அகாடமியினர் ஒரு விழாவை நடத்தினார்கள். இந்த விழாவில் ஆச்சர்யமான அம்சம் மேடைகொள்ளாத அளவிற்கு இசையுலகைச் சேர்ந்தவர்களும், திரையுலகைச் சார்ந்தவர்களும் வந்திருந்தது தான். 29 பேர் மேடையில் அமர்ந்திருந்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

● ● ●

● எஸ். ஜே. என்ற இனிஷியலிலேயே சில்வர் ஜூபிலியைக் கொண்டிருக்கும் ஜானகி எட்டாயிரம் பாட்டுக்களைத் திரைப் படங்களில் பாடியுள்ளார். விழாவில் அகலமான பச்சைக் கரை போட்ட வெள்ளைப் பட்டுப் புடவையில் கனகம்பீரமாக வந்து அமர்ந்தார். க்ளோஸ் — காலர் ஜாக்கெட்; ஹைநெக்.

● தொடக்க உரையாற்றிய DGP ராதா கிருஷ்ணன் அநாதி காலத்துக்கு முன் தோன்றிய சங்கீதத்தின் மகிமையை ஆங்கிலத்தில் (ஒரு 'கிராக்கி' கட்டுரையாக) பேசினார். டைரக்டர் பி. புல்லையா, குழந்தையின் அழுகுரலிலிருந்து தான் சங்கீதம் தோன்றிற்று என்று தெரிவித்தார். (சில பேர் பாடுவது அழுகையா சங்கீதமா என்று கண்டுபிடிக்க முடியாமலிருப்பது ஏன் என்று இப்போது தான் தெரிகிறது!)

● வெள்ளை பாண்ட்டும் வயலட் கலர் குர்த்தாவும் அணிந்து (அழகான ஆங்கில உச்சரிப்பில்) நிகழ்ச்சியில் பங்கு கொள்ள இருப்பவர்களைப் பற்றி அறிவித்தார் எஸ். பி. பால சுப்ரமணியம். கஷ்டப்பட்டு நீண்ட பட்டியலாக அவர் அறிவித்ததில் தொண்ணூறு சதவிகிதம் பேர் வரவேயில்லை — ஸ்ரீதேவி, சரிதா, ஸ்ரீப்ரியா, சிலுக்கு, ஜெயமாலினி உட்பட. ஆனால் 'ஊர்வசி' சாரதா பாராட்டுரை வழங்கி, கிரீடம் சூட்டியதோடு நிற்காமல், மாலைக் கனம் தாங்காது ஜானகி திணறிய போது அவற்றைக் கழற்றியும் அவருக்கு சிறிதும் வெகு உதவியாக இருந்தார். (கனமான பெரிய அட்டையில் அழைப்பிதழ் கொடுத்தது ரொம்ப சௌகரியமாய் இருந்தது — விசிறிக் கொள்ள.)

● மேடையிலுள்ள பெண்கள் எல்லாம் ஜானகிக்குத் திலகமிட்டு ஆரத்தி எடுத்தது ஒரு முக்கிய நிகழ்ச்சி என்றால், ஜானகி வந்திருந்த சுமங்கலிப் பெண்கள் எல்லாருக்கும் மஞ்சள் — குங்குமம் — கைவளையல்கள் கொடுத்தது அதைவிட முக்கியமான நிகழ்ச்சி!

● திருஷ்டி பரிகாரமாக ஜமுனாராணியைக் கூப்பிட்டு, மிக மட்டமான 'மாமா — மாமா' பாட்டை ஸர்ப்ரைஸ் ஐட்டமாகப் பாடச் சொன்னது யாருடைய அபார யோசனையோ?

● பாலமுரளி கிருஷ்ணாதான் இந்த சென்னை தெலுங்கு அகாடமியின் தலைவராம்.

● வராதவர்களில் குறிப்பிடத்தக்கவர்.— பி. சுசீலா.

•●•

100 படங்களில் நடித்தவர் ஒய். ஜி. மகேந்திரன். அவருடைய 'ரூபாய்க்கு மூணு

கோலி' நாடகம் 100-வது முறையாக அரங்கேறியது. இரண்டு சாதனைகளையும் இணைத்து ஒரு பாராட்டு விழா கலைவாணர் அரங்கில் நடந்தது.

எல்லோருக்கும் மாலை அணிவித்த பொழுது இரண்டு பேர்களை அவசரத்தில் விட்டுவிட்டார்கள். அதில் ஒருவர் பல படங்களில் மகேந்திரனுக்கு ஜோடியாக நடித்த வனிதா. மகேந்திரன் தவறைப் புரிந்து கொண்டு ஒலிபெருக்கியில் அறிவித்து அம்பிகாவிடம் கொடுத்து வனிதாவுக்கு மாலை அணிவிக்கச் சொன்னார்.

சமீபத்தில் வெளிநாடு சென்று விட்டு வந்த திருமதி ஒய். ஜி. பி. சுறுசுறுப்பாகப் புதிதாக வாங்கி வந்திருந்த காமிராவில் படமெடுத்துக் கொண்டிருந்தார். புகைப்படக்காரர் பாபாவின் காலை மிதித்து விட்டு மன்னிப்புக்கேட்கும் அளவுக்குச் சுறுசுறுப்பு.

லட்சுமி பேசும்பொழுது ஒய். ஜி. பி., திருமதி ஒய். ஜி. பி. இருவரின் காலிலும் விழுந்து வணங்குவதற்குத் தான் பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்று கூறினார். இந்தப் பாராட்டு விழாவை நடத்தியவர்கள் பிரபாத் கல்சுரல் அகாடமியும், ராஜேஸ்வரி பைன் ஆர்ட்ஸும். இவர்களுடைய அடுத்த பாராட்டு விழா புலியூர் சரோஜாவுக்காம். அதில் ஜெயக்கு ஸ்மிதா கலந்து கொள்ளப் போவதாகவும் செய்தி.

—சாருகேசி, சலன்

•●•

இலக்கிய சிந்தனை இந்த ஆண்டு அதிகப் படியாக ஒரு பரிசு அளித்தது. ''பாரதி காலமும் கருத்தும்'' என்ற விமர்சன நூலுக்கு. பரிசு பெற்றவர் சிதம்பர ரகுநாதன். சிறந்த சிறுகதைக்கு பிரபஞ்சனும் சிறந்த நாவலுக்கு ராஜம் கிருஷ்ணனும் வழக்கமான பரிசுகளைப் பெற்றனர்.

'ஆத்மார்த்த எழுத்து' பற்றி 'துபே'', 'யாருக்காக எழுதுகிறேன்? ஏன்? எதற்காக?' என்ற சிவசங்கரியின் ஆத்ம விசாரம், பரிசு பெற்றவர்களின் ஏற்புரைகள் குழந்தைசாமியின் சிறப்புரை எல்லாம் முடிவதற்குள் ரொம்ப நேரமாகிவிட்டது. சிங்கார வடிவேலன் எடுத்து வந்த 'தேன் துளி'களில் (கவி) பாதிக்கு மேல் திருப்பி எடுத்துப்போக வேண்டியதாயிற்று. 'கம்பர் வந்தார்' என்று சுப்பு ஆறுமுகம் வில்லுப் பாட்டு தொடங்கிய போது மண்டபத்திலிருந்து பாதிக் கூட்டம் நழுவிவிட்டது. கடைசி பஸ்ஸையாவது பிடிக்க வேண்டுமே? பரிசுகள் அளித்துச் சிறப்பிப்பதுடன் மாதா மாதமும் புத்தாண்டு தினத்திலும் எழுத்தாளர்களை ஒன்றுகூடவும் வைத்து நற்பணியாற்றும் இலக்கிய சிந்தனை ஆண்டுவிழா நிகழ்ச்சிகளைக் கச்சிதப்படுத்துவதில் சற்று சிந்தனையைச் செலுத்தலாம்.

—பி. எஸ். எம்.



## சாருஹாசன் மிரண்டு போனார்!

சாருஹாசன் சொன்னார்: ''நான் பரமக்குடியில் வழக்கறிஞராக இருந்த சமயம். ஒரு வழக்கு விஷயமாகச் சென்னை ஹைகோர்ட்டுக்கு வரவேண்டியிருந்தது.

எழும்பூரில் ரயிலை விட்டிறங்கி டாக்சி பிடித்து, ''எவரெஸ்ட் ஓட்டலுக்குப் போ'' என்றேன். டாக்சி டிரைவர் பூந்தமல்லி ஹைரோடு பக்கம் போகாமல் மவுண்ட் ரோடு பக்கம் திரும்பினார்.

''ஏனப்பா, நான் ஒன்றும் ஊருக்குப் புதுசில்லை. ஏன் ராங் சைடில் போகிறாய்?'' என்று கடுகடுத்தேன்.

''இல்லை, காப்பி சாப்பிட்டு விட்டுப்போகலாம் சார்'' என்றார்.

''அதற்கெல்லாம் நேரமில்லை. நீ மரியாதையாகக் காரை எவரெஸ்ட்டுக்கு விடப் போகிறாயா இல்லையா?''

''சரிதான்டா... ரொம்ப அலட்டிக்காதே. நான் வேணுமானால் காப்பிச் செலவை ஏற்றுக் கொள்கிறேன் சும்மா வா'' என்றார் டிரைவர்.

தூக்கி வாரிப் போட்டது. திரும்பிப் பார்த்தார் டிரைவர். ''அட நீயா!'' என்றேன்.

ஓர் இனிய அதிர்ச்சி. அந்த டிரைவர் எனது நண்பர் வைத்தியநாதன். பி.எஸ்ஸி. படித்த அவர் சொந்த டாக்சி ஓட்டுகிறார். இருவரும் விழுந்து விழுந்து சிரித்தோம்!''

—மன்னா

# அம்பேல், 36 கோடி ரூபாய்!

**உருக்கு உருளை (Steel Rolling) ஆலை களுக்கு விற்பனை வரி விலக்கு அளித்த தன் மூலம் கிட்டத்தட்ட 36 கோடி ரூபாய் வருவாயைத் தமிழக அரசு இழந்திருக்கிறது என்று குற்றம் சாட்டியிருக்கிறது 1982-83ம் ஆண்டிற்கு நெல்லிகுப்பம் கிருஷ்ண மூர்த்தி தலைமையில் அமைக்கப்பட்ட பொதுக் கணக்குக் குழு.**

**1970ல்** பியாரிலால் மல்ஹோத்ரா என்பவருக்கும் தமிழ்நாடு அரசுக்கும் இடையில் நடந்த வழக்கில் இரும்புத் துண்டு களுக்கும் துகள்களுக்கும் (Billets and Scraps) ஏற்கனவே வரி விதிக்கப்பட்டிருப்பதால், அவற்றிலிருந்து தயாரிக்கப்படும் உருக்கு உருளைப் பொருள்களுக்கு விற்பனை வரி விதிக்கத் தேவையில்லை என்று உயர்நீதி மன்றம் தீர்ப்பு வழங்கியது. இந்தத் தீர்ப்பை எதிர்த்துத் தமிழக அரசு சுப்ரீம் கோர்ட்டில் மனு தாக்கல் செய்தது. அதன்படி 19-1-76 அன்று, 'உருக்கு உருளைப் பொருள்களுக்கு விற்பனை வரி விதித்தது சரியே' என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்தது. உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்த தேதியான 10-4-70 முதல் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்த தேதியான 19-1-76 வரையிலான கால கட்டத்துக்கு உண்டான விற்பனை வரியை அவர்களிடமிருந்து வசூலிக்க வேண்டிய தமிழக அரசு உருக்கு உருளை ஆலை அதிபர்கள் வேண்டு கோளின்படி வரி பாக்கித் தொகையை 3-1-77அன்று தள்ளுபடி செய்துவிட்டது!

தமிழ்நாட்டில் மொத்தம் 65 உருக்கு உருளை ஆலைகள் உள்ளன. இவை ஆண்டொன்றுக்கு சராசரி 50 சதவீதத் திறனுடன் வேலை செய்தாலே 2,60,000 டன் உற்பத்தி செய்ய முடியும். இதன் மொத்த விற்பனை மதிப்பு 78 கோடி ரூபாய். இந்த அடிப்படையில் 4 சதவீத விற்பனை வரி தள்ளுபடி செய்வதென்று வைத்துக் கொண்டால் ஆண்டொன்றுக்கு 3.12 கோடி அரசுக்கு வருவாய் இழப்பு ஏற்படுகிறது. 10–4–70 முதல் 19–1–76 வரை கிட்டத்தட்ட ஆறு வருட காலத்துக்கு வரியைத் தள்ளுபடிசெய்து விட்டதன் மூலம் அரசு இழந்த தொகை ஏறத்தாழ 19 கோடி ரூபாய். இந்தத் தள்ளுபடிக்கு யார் காரணம்? 1970 முதல் 1975 வரை தி. மு. க. ஆட்சி நடந்து கொண்டிருந்தது. பிறகு தள்ளுபடி செய்து அரசு ஆணை போட்ட தேதியில் ஜனாதிபதி ஆட்சி நடந்து கொண்டிருந்தது. தி. மு. க. ஆட்சி காலத்தில் வழக்கு நடந்து கொண்டிருந்த படியால், தி.மு.க. அரசைக் குற்றம் சொல்ல முடியாது. இப்படி வரிவிலக்கு அளிப்பதென்றால் ஏன் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்திருக்க வேண்டும்?



இந்தத் தள்ளுபடி போதாதென்று உருக்கு உருளை ஆலை அதிபர்கள் சங்கம் 25–7–77 அன்று அரசுக்கு அவர்களது கஷ்டங்களை(?) விளக்கி, இனி வரும் காலங்களிலும் வரி விலக்கு அளிக்கவேண்டும் அல்லது வரியைக் கடனாகக் கருதி அரசுக்கு நாளாவட்டத்தில் சிறிது சிறிதாகச் செலுத்த அனுமதிக்க வேண்டும் என்று கோரியது. அதன்படி அவர்களது வேண்டுகோளைப் பரிசீலிக்க 9–5–78 அன்று பணிக் குழு (Task force) ஒன்றை அமைத்தது அ. தி. மு. க. அரசு. இந்தப் பணிக்குழு என்னதான் பரிந்துரையில் கூறியதோ தெரியவில்லை. — 24–1–82ம் தேதி பிறப்பிக்கப்பட்ட ஆணையின்படி 19–1–76 முதல் 31–3–82 வரை உருக்கு உருளை ஆலைகளுக்கு வரி தள்ளுபடி அளித்தது அ. தி. மு. க. அரசு. இந்த ஆறு வருடங்களுக்கு மறுபடி வரி இழப்பு 19 கோடி ரூபாய். ஆக 10–4–70 முதல் 31–3–82 முடிய உருக்கு ஆலைகளுக்கு வரி தள்ளுபடி அளித்ததன் மூலம் அரசு இழந்த வருவாய் ரூ. 36 முதல் 38 கோடிவரை. ஏமாந்த விவசாயியின் மீது பாய்ந்து கடன் பாக்கிக்காகக் குடம் கோழி என்று ஜப்தி செய்கின்ற அ. தி. மு. க. அரசு உருக்கு உருளை ஆலைகளுக்கு மட்டும் இப்படி வரி தள்ளுபடி அளிக்கக் காரணம் என்ன?

பணிக்குழு ஒன்றை அமைத்து அதன் பரிந்துரையின்படி வரி தள்ளுபடி செய்த அ.தி. மு. க. அரசு, பொதுக் கணக்குக் குழு கேட்ட சில முக்கியமான கோப்புகளைத் தர மறுத்து விட்டது. காரணம் பொது நலனுக்கு உகந்தது அல்லவாம். இது என்ன மாய்மாலம்? பணிக் குழுவின் கூட்டத்தில் உருக்கு ஆலை அதிபர்கள் கலந்து கொண்டிருக்கும் போது, அரசின் கணக்குகளைச் சரிபார்க்கும் பொதுக் கணக்கு குழுவுக்குக் கோப்புகளையும் நடவடிக்கைக் குறிப்புக்களையும் அரசு ஏன் காண்பிக்காமல் இருந்தது என்பது வியப்புக்குரியது மட்டுமல்ல, பல சந்தேகங்களை எழுப்பவும் செய்கிறது. அ.தி.மு.க. தலைவர்கள் வரி தள்ளுபடி செய்ய உருக்கு ஆலை அதிபர்களிடமிருந்து ''வேண்டியதைப்'' பெற்றுக்கொண்டு விட்டதாக அரசியல் வட்டாரங்களில் பேசப்படுவதை நம்ப இந்தப் போக்கு இடம் தருகிறது. இன்னொரு வேடிக்கையான விஷயம் என்னவென்றால் உருக்கு உருளை அதிபர்கள் தங்களது கோரிக்கைகளில் வரி பாக்கியைக் கடனாகக் கருதும்படிதான் கோரியிருந்தார்கள். ஆனால் வரியைத் தள்ளுபடியே செய்திருக்கிறது அ. தி. மு. க. அரசு. இது லஞ்ச ஊழல் சந்தேகத்தை மேலும் கிளப்புகிறது.

சட்ட மன்ற விதிகள் 222ன்படி அமைக்கப்பட்ட இந்தப் பொதுக் கணக்கு குழுவுக்கு முழுமையான அதிகாரங்கள் இல்லை. அதே விதிகளின் 232ம் பிரிவின்படி பொது நலனுக்கு உகந்ததல்ல என்று அரசு கருதினால் கோப்புக்களையும் குறிப்புக்களையும் காட்ட வேண்டியதில்லை என்று கூறப்பட்டுள்ளது. முதலில் இந்த விதி திருத்தப்பட வேண்டும். பொதுக் கணக்குக் குழு கோரும் எல்லா விஷயங்களையும் கோப்புக்களையும் அரசு கொடுத்தாக வேண்டும் என்று சட்டம் செய்தால்தான் அந்தக் குழுவின் பணி முழுமை பெறும். மக்களுக்கும் உண்மைகள் தெரிய வரும். அரசும் முறைகேடான முடிவுகளை எடுக்கத் துணியாது!

- நமது நிருபர்

---

கடந்த மாதம் மதுரைக்கு அருகிலுள்ள ஒரு ஊரில் நடைபெற்ற நாடக விழாவுக்கு வருவதாக இருந்த டைரக்டர் பாக்யராஜை அவரது ரசிகர்கள் சிலர் மதுரை ரயில்வே ஸ்டேஷனில் மாலையும் கையுமாக வரவேற்கக் காத்து நின்றனர். ஆனால் திடீரென்று ரயிலில் இருந்து இறங்கிய சென்னையைச் சேர்ந்த கவிஞர் ஆர். ச. சந்திரசேகர் என்பவர் தோற்றத்தில் அசல் பாக்யராஜ் போல இருக்கவே ரசிகர்கள் உண்மையான பாக்யராஜ் என்றெண்ணி சந்திரசேகரின் கழுத்தில் மாலையைப் போட்டு விட்டனர். உண்மையான பாக்யராஜ் கோடைரோட்டி விருந்துநாடகம் நடைபெறும் ஊருக்குக் காரில் சென்று விட்டார் என்பது பின்னால்தான் ரசிகர்களுக்குத் தெரிந்தது!

—இசைமுத்து



✕ பாக்யராஜ்



✕ சந்திரசேகர்

## உங்கள் குழந்தை பிறரைவிட அதிகமான மனவளர்ச்சி பெற்று பள்ளியில், மாவட்டத்தில் - ஏன் மாநிலத்திலேயே முதன்மையாகத் திகழ, அன்புடன் வாங்கியளியுங்கள் ...

# சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க் பாகம் 1

உங்களது அன்புச்செல்வம் அறிவுச்செல்வத்தையும் பெற்றால்தான் சக மாணவர்களுடன் போட்டியிட்டு முன்னேற முடியும். அறிவு வளர்ச்சிக்கு பாடப் புத்தகங்களை மட்டும் பயின்றால் போதாது. குழந்தைகளின் மனத்தில் இயல்பாகக் கிளரும் ‘இது ஏன்?’, ‘அது எப்படி?’ என்பன போன்ற வினாக்களுக்குச் சரியான விடைகள் உடனுக்குடன் கிடைக்க வேண்டும். புரியாத புதிர்களுக்குத் தகுந்த விடைகளை பெற அருமையான அறிவுக்களஞ்சியம் –

**சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க்**
பாகம் 1

ஏறக்குறைய 200 வினாக்களுக்கு விடைகள்.




Vol. II in press

பெரிய சைஸ்
232 பக்கங்கள்
விலை ரூ. 20/-
தபால் கட்டணம்
ரூ. 4/-

விற்பனைக்குத் தயார் !

- ஆங்கிலம் மற்றும் இந்தியில் பாகம் 1, 2 & 3.




- தெலுங்கு, கன்னட, வங்காளி குஜராத்தி, மராட்டி மொழிகளில் முதற்பாகம், இதே விலை.

**From the makers of Rapidex English Speaking Course**

இந்த அறிவுக் களஞ்சியத்தில் அடங்கியுள்ள சில அருமையான வினாக்கள் :

• வானவில் உண்டாவது எப்படி? • நோபல் பரிசு என்றால் என்ன? • கடிகாரத்தினுள் ஜுவெல்கள் பொருத்துவதேன்? • பேய்-பிசாசுகள் இருப்பது உண்மையா? • சிலர் குள்ளமாயிருப்பதேன்? • பெண்களுக்கு தாடி ஏன் வளருவதில்லை? • சீனத்து நெடுஞ்சுவர் ஏன் கட்டப்பட்டது? • உலக அதிசயங்கள் எங்கே போயின? • மூக்குக் கண்ணாடி மூலம் தெளிவாகக் காண்பது எங்ஙனம்? • உலகம் எத்தனை பழைமையானது? • பூகம்பம் எவ்வாறு ஏற்படுகிறது? • இறந்த கடல் என்றால் என்ன? • விண்வீழ்கொள்ளி என்றால் என்ன? • டெலிவிஷன் எவ்வாறு உருவாகியது? • கம்ப்யூட்டர் எவ்வாறு வளர்ச்சியுற்றது? • ஆண்டி-பயாடிக்ஸ் என்றால் என்ன? • தலை வழுக்கை ஆவதேன்? • ஆலங்கட்டிகள் உண்டாவது எப்படி? • சூரியமண்டலம் என்றால் என்ன? • கடல்களுக்குள்ளேயும் மலைகள் இருக்கின்றனவா?

**Postage FREE On purchase of every 2 Books**

இந்தியாவெங்கும் பெரிய புத்தகக் கடைகளிலும் ஹிகின்பாதம்ஸ் மற்றும் ரெயில்வே புத்தக ஸ்டால்களிலும் கிடைக்கும்.

வி.பி.பி. மூலம் பெற தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி :



**PUSTAK MAHAL**
**Khari Baoli, Delhi-110006**
New Show Room:
10-B, Netaji Subhash Marg, New Delhi-110002

# ஆசை

குழந்தைகளாக இருக்கும் போது பள்ளிப் படிப்பில் முதல் ராங்க் வர வேண்டும் என்று ஆசை. மாணவர் பருவம் வரும் போது படிப்பிலும் விளையாட்டிலும் முதல் ராங்க் வரவேண்டும் என்று ஆசை. இளைஞனாக இருக்கும்போது நல்ல உடை அணிந்து நம்மை அனைவரும் பார்க்க வேண்டும், கவர்ச்சிகரமாக இருக்க வேண்டும் என்று விரும்புவான். இன்னும் கொஞ்சம் முதிர்ந்த வயது வரும்போது தொழிலிலும், உத்தியோகத்திலும், நல்ல மேல்நிலையை அடைய வேண்டும் என்று விரும்புவான். இன்னும் கொஞ்சம் முதிர்ந்த வயது வந்து அனுபவம் வரும் போது, குழந்தைகள் பேரன்கள் இவர்களிடம் அதிக ஈடுபாடு ஏற்படும். பொருள் சேர்த்துக் கொள்வதிலும் அதிக ஆசை ஏற்படும். இன்னும் சிறிது முதிர்ந்த வயதில் தலையில், உள்ள மயிர்கள் வெளுத்துப் போய் விடும்; ப்றகள் எல்லாம் விழுந்து இருக்கும். உடம்பெல்லாம் நடப்பதற்குக் கூட முடியாமல் ஆகிவிடும். இந்தத் தளர்ந்த நிலையிலும், மனம் மட்டும் மிகவும் இளமையான சிந்தனைகளையும், ஆசைகளையும் வைத்துக் கொண்டே இருக்கும். ஆசையற்று இருப்பவன் ஞான வழி தேடிச் செல்பவன் மட்டுமே. பொருளில் ஆசை இருப்பவர்கள் பதவியிலே ஆசை இருப்பவர்கள், மேலும் மேலும் வளர வேண்டும் என்று ஆசைப்படுவார்கள். போதும் என்ற மனம் ஆசைக்குக் கிடையாது. நன்றாகத் தீப்பிடித்து எரிகிற கட்டையிலே எண்ணெய் விட்டால் எப்படி நன்றாகக் குளிர் விட்டுக்கட்டை எரியுமோ, அது போல ஆசை என்னும் தீ மேலும் மேலும் அந்தப் பொருள் வேண்டும், இந்தப் பொருள் வேண்டும் என்று வளர்ந்து கொண்டே போகுமே தவிர குறையாது. களிமண்ணிலே தண்ணீர் ஊற்றினால், அதைப் பிசைந்து பல மண் பாத்திரங்கள் உருவாக்கலாம். சமுத்திர மண்ணிலே எவ்வளவு தண்ணீர் ஊற்றினாலும் அதை வைத்துக் கொண்டு ஒரு பண்டமும் பண்ண முடியாது. அத்தனை தண்ணீரையும் மணல் உறிஞ்சி விடும். அது போல ஆசை எத்தனை பொருளைப் பார்த்தாலும் அத்தனையையும் உறிஞ்சி விடும். ஆசைக்கு அளவே கிடையாது. ஆதி சங்கரர், தாயுமானவர் சுவாமிகள் போன்றோர், ஆசையினால் துன்பம் உண்டாகும், ஆசையை விட்டதனால் பரமானந்தம் கிட்டும் என்று சொல்லியிருக்கிறார்கள்.

ஒரு சமயம் ஒரு நாய் தெருவோடு செல்லும்போது ஒரு எலும்புத்துண்டைக் கண்டது. அந்த எலும்பில் முன்பு இருந்த மாமிசத்தின் வாசனை கண்டு அதைச் சாப்பிட ஆரம்பித்தது. அந்த எலும்பின் ஒரு பகுதி சாப்பிடும் போது நாயின் வாயில் குத்திவிட்டது. அப்போது நாயின் வாயிலிருந்து ரத்தம் வந்தது. தன்னுடைய ரத்தத்தையே மிகவும் ருசித்துச் சாப்பிட்டது. அது போல்தான் ஒவ்வொரு மனிதனும் ஆசையினால் உந்தப்பட்டு இன்பங்களை அனுபவிக்கிற மாதிரி தோற்றம் ஏற்பட்டாலும் துன்பத்திலே முடிவடைகிறது. மனிதனுடைய வீழ்ச்சிக்கு மட்டுமின்றி முயற்சிக்கும் ஆசை உதவுகிறது. விஞ்ஞான சாதனைகள் உண்மைகளைக் கண்டறியும் ஆசையால் உண்டாகின்றன. இதே போல் சமுதாய முன்னேற்றத்துக்கும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் ஆசைதான் தூண்டுகோலாக அமைகிறது. கல்வி, விளையாட்டுத்துறைகளில் வெற்றிகளைக் குவிக்கிறது. எனவே ஆசை முற்றிலும் தவறல்ல. ஆசை சமுதாயத் தேவைக்காக ஏற்படும் போது அது துன்பத்தை ஏற்படுத்தாது. நன்மை செய்யும். ஆசையே தன்னலம் கருதும் பேராசையாக மாறும் போது அது பெரிய துன்பத்தை ஏற்படுத்துகிறது. எனவே இறைவன் தந்த ஆசை என்ற உணர்வை அடக்கி ஆளவும் முறையாகப் பயன்படுத்தவும் பழக வேண்டும்.

''அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம்'' என்றார் வள்ளுவர். ஆசை இல்லாதவருக்குத் துன்பமும் இல்லை.

**-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**



# தாழ்விலும்

ஒவ்வொருவர் வாழ்விலும் ஏற்றத்தாழ்வுகள் சகஜம்.

ஆனால் தாழ்வுகள் எவ்வளவு குறைவாக இருக்கின்றனவோ அவ்வளவுக்கு அவர்களுக்கு நல்லது.

அதற்கு அவர்கள் நல்ல ஆரோக்கியத்துடன் வாழவேண்டியது அவசியம். இதற்குத்தான் ஹார்லிக்ஸ் இருக்கிறது. ஹார்லிக்ஸ் ஒவ்வொரு நாளும் உடல் ஆரோக்கியத்தை அளிக்கிறது.

இதனால் தான் லட்சக்கணக்கான மக்கள் 100 ஆண்டுகளுக்கு மேலாக ஹார்லிக்ஸின் நற்பயனில் நம்பிக்கை வைத்து வருகிறார்கள்.

உலகமெங்கிலும் டாக்டர்கள், ஹார்லிக்ஸை உடல் ஆரோக்கியத்துக்கு உகந்த உத்தரவாதமென்று சிபாரிசு செய்கிறார்கள்.

அதனால் ஆச்சரியமில்லை. ஹார்லிக்ஸின் ஊட்டம் நிறைந்த சுத்தமான சத்துக்கள் சிறப்பான ஒரு முறையில் ஒன்றிணைந்து அவற்றின் நற்பயனும் எளிதாக சீரணிக்கும் இயல்பும் நீடிக்கின்றன.

ஹார்லிக்ஸை உங்கள் குடும்ப வாழ்க்கையின் இன்றியமையாத அம்சமாக்கிக் கொள்ளுங்கள். எதிர்பார்க்க எவ்வளவோ இருக்கிறது.




## முழுமையான ஊட்டம் பெற

HTD-HMM-7536


இந்திரா
ராமராவ்
சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர்
சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர்
சென்னைவாசி


நானே இறங்கிப் போயிடறேன்... சக்கர நாற்காலி எதுக்கு?
மகாராஷ்டிரா ஆட்சி
இ. காங்கிரஸ் மேலிடம்


புலி வருது!... புலி வருது!...
புலியாவது கிலியாவது!... இப்பழுத்தான் 'மேப்' அடிச்சுக் கிட்டே இருப்பார்!
நகராட்சி தேர்தல் (ஜூலை)

கல்கி



1983 மே 1
ருத்ரோத்காரி சித்திரை 18
மலர் : 41 இதழ் : 40



# இரு வெற்றிகள்!

பிரதமர் பார்வையாளராக வந்திருந்து சிறப்பிக்க, ஸ்ரீஹரிகோட்டாவிலிருந்து வெற்றிகரமாக ராக்கெட் ஏவப்பட்டு, ரோகிணி செயற்கைக் கோள் உலகைச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது; இங்கிருந்து விஞ்ஞானிகள் அனுப்பும் கட்டளைகளை ஏற்றுச் செயல்படுகிறது. இந்த மகத்தான சாதனை பிரதமரைப் போலவே நம்மையும் மெய்சிலிர்க்க வைத்திருக்கிறது. விஞ்ஞானிகளையும் அவர்களது திறமையையும் வாழ்த்துகிறோம். ஆனால் செயற்கைக் கோள்களின் ஆற்றல்களை முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளத் தக்க முன்னேற்பாடுகளைச் செய்து கொள்ளாமல் அவற்றை உலகைச் சுற்றிவர அனுப்பிக் கொண்டிருப்பது விரயமாகவே முடியும். உதாரணமாக, பிரதமர் நேரில் கண்டு களித்த எஸ். எல். வி. ராக்கெட் புறப்பாட்டினை நாமும் அதே நேரத்தில் டெலிவிஷனில் பார்த்து மகிழலாம் என்று எண்ணியிருந்த ஆயிரக் கணக்கான மக்கள் ஏமாற்றமே அடைந்தனர். பூமியின் கனிவளம் அறிதல்; புயல், மழைச் சின்னங்களை முன்கூட்டியே உணர்தல் போன்றவற்றை வல்லரசுகளின் ஒத்துழைப்போடு குறைந்த செலவில் நாம் பெற்றுவிட முடியும். ராக்கெட் விஞ்ஞானத்தில் நாம் அடைந்துள்ள முன்னேற்றம் ராணுவ ரீதியில் பயன்படலாம் என்றும் ஏவுகணைகளைத் தயாரித்துக் குறிப்பிட்ட இலக்குகளைத் தாக்க அவற்றை அனுப்பலாம் என்றும் கருத இடமிருக்கிறது. ஆண்டொன்றுக்கு நூறு கோடி ரூபாய் செலவு செய்து இந்த ஆற்றலை நாம் பெறுவதை விட அமைதி காக்கவும் நட்புறவுகளை வளர்க்கவும் சில கோடிகளைச் செலவழிப்பது அதிக பலன் தரும்.

* * *

கனவா நிஜமா என்று அதிசயிக்கிறோம்! நம்பவே முடியவில்லை! இழுத்துப் பறித்துக் கொண்டிருந்த கிருஷ்ணா நதி நீர்விவகாரம் ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்கிறது. அடுத்தடுத்து வந்த ஆந்திர முதல்வர்கள் வாய்ப் பந்தல் போட்டதோடு சரி. என். டி. ஆர். தான் பதவிக்கு வந்த சில நாட்களுக்குள்ளேயே பல நற்பணிகளை நிறைவேற்றியது போல் கிருஷ்ணா நதி நீரைச் சென்னைக்கு அனுப்புவதிலும் முனைந்து நின்று நமது நன்றியையும் வாழ்த்துக்களையும் பெற்றுக் கொண்டிருக்கிறார். வருகிற வழியில் கிருஷ்ணா நதி நீர் ஆந்திர மாநிலத்தின் பல பகுதிகளையும் வளப்படுத்தும். எனவே ஆந்திர மாநிலமும் செலவில் பங்கேற்கிறது. சென்னைக்குக் குடிநீர் தந்ததற்குப் பதிலாக ராம ராவ் கேட்ட பரிசு நமது நெஞ்சை நெகிழ வைப்பது. சரஸ்வதி மஹால், கன்னிமாரா பொது நூலகம் முதலிய இடங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ள தெலுங்கு இலக்கியத் தொடர்பான பழைய கையெழுத்துப் பிரதிகளை ஆந்திரத் தலைநகருக்கு அனுப்பித் தரவேண்டும் என்று கோரியுள்ளார். இது அவரது பெருந்தன்மையை மேலும் உயர்த்தியுள்ளது. சரித்திர நாவல்களில் மட்டுமே நாம் சந்திக்கும் ராஜ கம்பீரத்தை என். டி. ஆரிடம் இன்று பார்க்கிறோம். கிருஷ்ணா நதி நீர் வருவதற்கு முன் சென்னையில் அதனை வரவேற்கவும் தேக்கி வைத்து விநியோகிக்கவும் தேவையான முன்னேற்பாடுகளைச் செவ்வனே செய்துவிட வேண்டும். இல்லையேல் 220 கோடி (தமிழகத்தின் பங்கு) செலவழித்து வரும் நீர் வீணாகும். இந்த ஆறு ஆண்டுத் திட்டத்தைத் தாமதமின்றியும் நிறைவேற்ற வேண்டும். தவறினால் திட்டமிட்டதை விடச் செலவு அதிகமாகும் என்பது மட்டுமல்ல, ஒருவேளை ஆட்சி மாறினால்....? 30 கோடி விழுங்கிய வீராணத்தின் கதி இதற்கும் நேர்ந்துவிடக் கூடாதல்லவா!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

● ஆந்திர முதல்வரின் வாழ்க்கைச் சரிதை அருமை. 'தன்னலமற்ற சேவை உணர்வுக்கு, மக்களிடையே எப்போதும் வரவேற்புண்டு' என்பதை மெய்ப்பிக்கும் அவரது வாழ்க்கை அனுபவங்கள் பலருக்கு வழிகாட்டியாக விளங்கும்!

வேலாயுதம் பாளையம் எம். சம்பத்.

● 'நாங்கள் திருவாரூர் செல்லும் போது என் தாயார் உடன் வராத குறையை கல்கியில் ''தெய்வ தரிசனம்'' கட்டுரைத் தொடரைப் படித்தும், தியாகேசன் கோபுரத்தையும், ரதத்தையும் அட்டையில் கண்டும் நிவர்த்தி செய்து கொண்டார்.

பாண்டிச்சேரி கல்வே. சதாசிவம்.

● இந்திய சமய கலாசார கலைவிழாவின் போது 'பத்து பைசா முறுக்கு; பள்ளிவாசலை நொறுக்கு; 'வீரவேல் வெற்றிவேல்; வீரமணியை ஒழித்துக் கட்டு' போன்ற கோஷங்களை முழக்கிச்சென்ற ஊர்வலத்தில், 'வாழ்க', 'ஒழிக' கோஷம் கிடையாது' என எழுதியுள்ள கல்கியாரே! விருப்பு, வெறுப்பு இல்லாமல் எழுதும் செய்திகளோ.

நெடுமருதி கே. சி. பிரசாத் குமார்.

● சவீதாவின் நேசமுள்ள வான் சுடரே தொடக்கமே அற்புதம். ராக்கிங் கொடுமையிலிருந்து டெய்சியைக் காப்பாற்றிய பத்மாவின் சாமர்த்தியம் வியக்கத்தக்கது.

திருவாடானை எஸ். நாகசுந்தரம்.

● புத்தாண்டுச் சிறப்பிதழில் என் கேள்வியைச் சிறந்த கேள்வியாகத் தேர்ந்தெடுத்தமைக்கு நன்றி.

ஒரு சிறு விளக்கம். பிரேம்நசீர் மட்டுமென்ன, படித்த பண்புள்ள, அனுபவமிக்க மனிதர்கள் மீது என்றுமே எனக்கு மதிப்பும் மரியாதையும் உண்டு. பத்மபூஷண்பட்டம் கொடுத்து அவரை விலைக்கு வாங்க முயன்றவர்கள் எண்ணத்தில் மண்ணைப் போட்டுவிட்டார் என்ற உள்ளர்த்தத்தில் தான் அந்தக் கேள்வி எழுந்ததேயொழிய, நசீரும் அரசியலில் புகுந்து விட்டாரே என்று குறைப்பட்டுக் கொள்ளும் அர்த்தத்தில் அல்ல.

மதுரை–6 கே. ராஜகோபாலன்.

## மரணம் இல்லாத போது மரண பயம் ஏது?



● ரயில் கம்பார்ட்மெண்டைச் சுத்தம்செய்து பிழைத்த சிறுவனைப் பற்றிய துணுக்கைப் படித்தேன். நானும், என் நண்பனும் சென்னை – பம்பாய் ஜனதா எக்ஸ்பிரசில் பயணம் செய்யும் போது எங்கள் கம்பார்ட்மெண்ட்டைச் சுத்தம் செய்த சிறுவன் என் நண்பனின் செருப்பை அடித்துச் சென்று விட்டான். இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

மதுரை. நாகுவேலன்.

● ஹரியானா முதல்வர் பஜன்லாலின் டில்லி விஜய செய்தியைப் படித்தேன். எமர்ஜென்ஸி காலத்தில் உ. பி. யின் முதல்வராக இருந்த திவாரியின் கதையும் இதேதான்! நாராயணதத் திவாரி என்ற பெயர் கொண்ட அவரைச் சுருக்கமாக என். டி. திவாரி என்றழைப்பார்கள். மனிதர் வாரம் மூன்று முறை டில்லிக்குச் சென்று திரும்பும் வேகத்தைக் கண்டு பிரமித்த குடிமக்கள் அவருக்கு 'நியூடில்லி' திவாரி என்ற பட்டத்தை அன்போடு சூட்டிவிட்டனர்!

சென்னை–35. சி. பூபால் சிங்.

● வைரமுத்து தொடங்கி வைப்பதாகக் கூறும் பணி சிறப்பானது. புதிய சிந்தனைகள் பூத்து உலா வரும் பூவனமாகவே மரபுக் கவிதைத் துறை சிறக்கட்டும்.

சென்னை–78 சுப்ர பாலன்.

● கவிஞர் வைரமுத்து கூறியதில் எது வேண்டுமானாலும் சரியாக இருக்கலாம். ''மரபின் கண்களில் மரண பயம்'' என்பது சரியில்லை. தமிழ்க் கன்னியின் உயிர் மரபுக் கவிதை. அதற்குச் சாவே கிடையாது. மரபுக் கவிதைஅணிக்குக் கவிஞர் வைரமுத்து வருவதைப் பாராட்டுவோம்.

சென்னை–44 மனசை. ப. கீரன்.

● மரபுக் கவிதை ஏதோ அவர் முன் மண்டியிட்டு உயிர்ப்பிச்சை கேட்பதாகவும் இவர் தான் ஏதோ இறந்தாரை எழுப்பும் இராமலிங்கரின் வாரிசைப் போலவும் எழுதியிருக்கிறார்.

பல்வேறு கவியரங்குகளில், பத்திரிகைகளில் மரபின் மகத்துவம் இங்கே வரலாறு படைத்துக் கொண்டு தான் இருக்கிறது. அதற்கு மரணமே கிடையாது எனில் மரண பயம் ஏது?

சென்னை–44 மதிவண்ணன்.

# நேசமுள்ள வான்சுடரே

சவீதா

**சென்ற இதழ்களில்....**

கிராமத்தில் பிறந்த பத்மா பிஞ்சுப் பருவத்தில் பெற்றோரை இழந்தவள். சென்னைக்கு வந்து சித்தி—சித்தப்பா தயவில் வளர்ந்தவள். பாலம் வார இதழின் ஆதரவில் மருத்துவக் கல்லூரியில் இடம் பிடித்து, கல்லூரியின் விடுதியில் தங்கிப் படிக்கிறாள்.

முதல் வருடப் படிப்பு முடிந்ததும் ஒரு மாத விடுமுறையைச் சித்தி வீட்டில் கழித்துவிட்டு மறுபடியும் விடுதிக்கு ஓடோடி வருகிறாள். இரண்டாவது ஆண்டு மாணவ மாணவியருக்காகக் கல்லூரிக் கதவுகள் திறக்கின்றன. விடுதித் தோழி டெய்சியுடன் வகுப்பை நோக்கி பத்மா நடக்கிறாள். உற்சாக ஆரவாரத்துடன் கும்பல் கும்பலாக வரும் மாணவருக்கிடையே அவள் விழிகள் சக மாணவன் ராம்குமாரைத் தேடுகின்றன.

இனி....

அனாடமி கட்டிடத்தின் நிழலுக்குள் பத்மாவும் டெய்சியும் பிரவேசித்தனர்.

அவர்களைப் படிக்கட்டில் பின்தொடர்ந்த கப்பையா வெள்ளை பாண்ட்டும் வெள்ளை ஸ்லாக்கும் அணிந்திருந்தான். இடுப்பை அகல பெல்ட் இறுக்கியது. பக்கத்தில்வந்த மீசை யில்லாத மாமல்லனிடம், ''கிளாசுக்குப் போறதுக்குள்ள ஒரு ஜோக்டா'' என்றான், கட்டைக் குரலில்.

''முதல் நானே ஆரம்பிச்சுட்டியா, சொல்லு'' என்றான் மாமல்லன்.

''டெல்லிவாலா ஸ்வீட் ஸ்டால்காரங்க ஒரு சேல்ஸ் கேர்ள் தேவைன்னு பேப்பர்ல விளம்பரம் குடுத்தாங்க. அதைப் பார்த்துவிட்டு....''

''ஸ்வீட் ஸ்டாலுக்கு ஸ்வீட் கேர்ள்ஸ் படையெடுத்திருப்பாங்க.''

''ஆமடா. ஏகப்பட்ட டேம்ஸ் ஏகப்பட்ட சர்ட்டிபிகேட்டுகளோட.... எல்லாம் எம். காம், பி.காம், பர்ஸ்ட் கிளாஸ்.... ஆனா யாருமே செலக்ட் ஆகல. கடைசியா எஸ். எஸ். எல். ஸி. பெயிலான ஒருத்தி, ஒரே ஒரு சர்ட்டிபிகேட்டோட வந்தா. அவளுக்குத்தான் அதிர்ஷ்டம் அடிச்சுது. அவளைத்தான் செலக்ட் பண்ணுங்க. ஏன் சொல்லு?''

''வழக்கம்போல் அதையும் நீயே சொல்லிவிடு.''



''அவ கொண்டு வந்தது டாக்டர் கொடுத்த மெடிகல் சர்டிபிகேட். அவனுக்கு டயபெடிஸ்''!''

கேட்டுக் கொண்டே முன்னால் நடந்த டெய்சி அவளை அறியாமல் 'குபுக்' கென்று சிரித்துவிட்டாள். தலையைத் திருப்பி பாராட்டும் விழிகளால் சுப்பையாவைப் பார்த்தாள்.

அவன் உடனே, ''ஹலோ! ஹவ் ஆர் யூ'' என்றான்.

டெய்சி, ''ஐ'ம் ஃபைன். அன்ட் யு?'' என்றாள். ''ஹாவ் யு பீன் அவே?'' என்றாள்.

''கொடைக்கானல்.''

''மொரீஷியஸ் போகலியா?'' என்று டெய்சி மறுபடியும் கேட்டாள்.

''ஊஹூம். ராம்குமார் இன்வைட் பண்ணான். அதனால கொடைக்கானல்போயிட்டேன். ஒன் மன்த் ஓடினதே தெரில. நீங்க மெட்ராஸ்லதான் லீவை ஸ்பெண்ட் பண்ணீங்க போல இருக்கு?''

''இல்லையே. நேற்றுத்தான் ஊர்லேர்ந்து வந்தேன்.''

ராம்குமார் என்ற பெயரை சுப்பையா உச்சரித்த வினாடியில் பத்மாவின் இதயம் படபடவென்று துடிப்பின் வேகத்தை அதிகரித்து விட்டது. மழைக்குப் பின் காளான் முளைப்பது போல அவள் மனப் பரப்பில் கேள்விக் குறிகள்.

ராம்குமார் எங்கே? கொடைக்கானலில் இருந்து இன்னும் வரவில்லையா? மென்ஸ் ஹாஸ்டல் வராந்தாவைச் சென்ற ஆண்டு முழுக்கக் காவல் காத்த அவனுடைய பைக் இன்னும் வந்து சேரவில்லையே.

சைக்கிள் ஸ்டாண்டிலும், ஆலமர நிழலிலும் கான்டீன் ஓரத்திலும் எத்தனைபைக்குகள் விறைக நிற்கின்றன. அவற்றில் ஒன்று ராம்குமாரின் பச்சை ராஜதூத்தாகத் திடீரென்று மாறக் கூடாதா?

ஒருவேளை டெய்சி சொன்னதைப் போல முதல் ஆண்டோடு படிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டானோ? லட்சாதிபதி வீட்டுப் பிள்ளை. என்ன வேண்டுமானாலும் செய்வான். அவனுக்கும் எனக்கும் 'என்ன இருக்கிறது? அவனை நம்பியா நான் இந்தக் கல்லூரியில் சேர்ந்தேன்? என் மனம் ஏன் இப்படிப் பைத்தியம் பிடித்து அவனைத் தேடுகிறது? அவன் வந்தால் எனக்கு என்ன லாபம்? அவன் வராவிட்டால் எனக்கு என்ன நஷ்டம்?

வராமலிருக்க மாட்டான். நிச்சயம் வந்திருப்பான். பைக்கை மலையிலேயே போட்டு விட்டு வந்திருப்பான். இந்நேரம் வகுப்பறைக்குள் உயரமாக நின்று சிரித்துப் பேசிக் கொண்டிருப்பான். நாலைந்து பேர் அவன் முகத்தை அண்ணாந்து பார்த்தபடி சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

''நம்ம ஆசிரியர் ஏன் ரொம்ப சோகமா இருக்கார்?''

''இன்னிக்கு அவரோட வீட்லே இருந்து நம்ம பத்திரிகையிலே வர்ற சமையல் குறிப்புகளைப் பார்த்துச் செய்த சமையலை அனுப்பியிருக்காங்களாம்!''



பத்மா நம்பிக்கையோடு நடந்தாள். டெய்சி யாருக்கோ ஹாய் சொல்லிக் கையை அசைத்தாள்.

அனாடமி இலாகாவின் வராந்தாவில் சாரி சாரியாக அசைந்த மாணவர் கூட்டத்தோடு பத்மாவும் டெய்சியும் கலந்தார்கள். வலப்புறமாகத் திரும்பினர். வகுப்பறைக்குள் நுழைந்தனர்.

ராம்குமார் அங்கேயும் இல்லை என்பதைப் பத்மா ஒரே நொடியில் கண்டு பிடித்து விட்டாள். ஓர் அற்புதமான வைகறை அருணோதயத்தைக் காண்பதற்கு முன்பே முடிந்து விட்டதைப் போல, காலையில் விடுதி அறைக்குள் பத்மா தலை குனிந்து புடவையின் மடிப்புகளை மார்பின் மீது சரி செய்து கொண்டிருந்தபோது நுரை கிளப்பிக் கொண்டு தளும்பிய மகிழ்ச்சியும் உற்சாகமும் திடீரென்று ஆவியாகி விட்டன.

அந்த வகுப்பறை இருட்டறையாக இருந்தது. கருநீலத் திரைகள் ஜன்னல்களை மறைத்துத் தொங்கின. ஸ்டாண்டில் சினிமா திரை வெண்மை விரித்தது. புத்தகத்திலுள்ள படங்களையும் ஸ்லைடுகளையும் அந்தத் திரைமீது 'புரொஜக்ட்' செய்து காண்பிக்கும் எபிடியாஸ்கோப் எனப்படும் ஆப்டிகல் லான்டர்ன் திரைக்கு முன்னே அண்ணாந்து பார்த்தபடி இருந்தது. எக்ஸ்ரே படங்களைப் 'பளிச்'சென்று காட்டும் லாபிகள் நாலைந்து வரிசையாக நின்றன.

வேகமாக 'டக் டக்' என்று உள்ளே வந்த 'டை' கட்டிய பஞ்சுத் தலை மனிதர் மேடையேறி எரியும் பல்புக்குக் கீழே நின்றார். வினாடிகூடத் தாமதிக்காமல், ''ஸ்டூடன்ட்ஸ்'' என்று அதிகாரத்துடன் விளித்து அனைவரின் கவனத்தையும் தன் பக்கம் இழுத்தார். பேச்சுக்களும் சிரிப்புக்களும் அடங்கிப் பரிபூரண அமைதி நிலவியது.

அவர் அனாடமி பேராசிரியர் டாக்டர் ராமகிருஷ்ணன். அவருடைய கற்பிக்கும் ஆற்றல் பற்றிக் கல்லூரியில் இருவித அபிப்பிராயங்கள் நிலவுகின்றன. மாணவிகள் தூண்டினால் மட்டுமே அக்கறையுடன் பாடம் எடுப்பார் என்ற பொதுப்படையான குற்றச்சாட்டில் ஐம்பது சதவீதம் உண்மை கிடையாது.

''...இன்று இரண்டாவது ஆண்டுக்குள் நீங்கள் கால் வைக்கிறீர்கள். உங்களை நல் வாழ்த்துக் கூறி வரவேற்கிறேன். சென்ற ஆண்டில் பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, பயாலஜியின் அடிப்படைகளை....''

பத்மா முகத்தை அசைக்காமல் பார்வையை மெல்லச் சுழற்றினாள். மாணவ மாணவிகள் குழுமி நின்றபடி பேராசிரியரின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ராம்குமாரின் முகத்தைத் தலைகளுக்கு மேலே தேடினாள். மிகவும் வளர்த்தியான ராம்குமாரின் முகம் இம்மாதிரிக் கூட்டங்களில் மேகத்துக்கு மேலே எட்டிப் பார்க்கும் காலைச் சூரியன் போலத் தோன்றுவது வழக்கம்.

''...இன்று முதல் முதலாக டிஸெக்ஷன் ஹாலுக்குள் நுழையப் போகிறீர்கள். டிஸெக்ஷன் ரூமின் பாரம்பரியங்களையும், விதி முறை கோட்பாடுகளையும் நீங்கள் கடைப் பிடித்துக் காப்பாற்றுவீர்கள் என்று எதிர் பார்க்கிறேன். ஒழுங்கீனங்களுக்குக் காரண மானவர்கள் மீது டீன் கடும் நடவடிக்கை எடுக்கத் தயங்க மாட்டார்.''

வரவேற்புப் பேச்சைச் சுருக்கமாக முடித்துக் கொண்டார். மாணவர்கள் கலைந்து வெளியேறினர். டிஸெக்ஷன் ஹாலுக்கு இட்டுச் செல்லும் வராந்தாவில் ஊர்வலம் சென்றனர். பத்மாவின் மனம் செயற்கைக் கோள் போல ராம்குமாரின் நினைவுகளையே சுற்றிச் சுற்றி வந்தது.

சென்ற ஆண்டு மருத்துவ மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக நேர்முகத் தேர்வு நடைபெற்றபோதுதான் பத்மா அவனை முதல் முதலாகப் பார்த்தாள்.

அரசினர் பொது மருத்துவ மனையில் மார்ச்சுவரிக்கு எதிர்ப்புறமுள்ள மாடியில் அந்த நேர்முகத் தேர்வு நடைபெற்றது. மருத்துவக் கல்லூரியின் இடங்களைப் பிடிக்கத் தகுதிக்கும் செல்வாக்குக்குமிடையே, மாமூலாக ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் போராட்டம் அது.

பாதிக்கு மேற்பட்ட மாணவ, மாணவிகள் கார்களிலும் இரு சக்கர வாகனங்களிலும் வந்திறங்கியவர்கள். அந்த இண்டர்வியூ பண்டிகைக்காகவே தைத்த அல்லது வாங்கிய புத்தாடைகளில், வாழ்க்கையில் வெற்றி பெற்றே தீர வேண்டும் என்ற பிடிவாதம் தீர்மானத்துடன் வரிசையில் காத்திருந்தனர்.

ஒவ்வொருவரும் துணைக்கு நாலைந்து பேரையாவது அழைத்து வந்திருந்தனர். அப்படியாகத் துணையாக வந்தவர்கள் பொது அறிவு, ஹூ இஸ் ஹூ புத்தகங்களைப் புரட்டி உள்ளே செல்லப் போகும் மாணவன் அல்லது மாணவியின் காதில் ஓதிக் கொண்டிருந்தனர். பிளாஸ்கிலிருந்து ஹார்லிக்ஸ் ஊற்றிக் கொடுத்தனர்.

பத்மா அனாதையாக அமர்ந்திருந்தாள். சிற்றப்பாவோ சித்தியோ வரவில்லை. வந்தாலும் அவர்களால் உதவி எதுவும் இருக்காது. அவளிடமிருந்த விலை உயர்ந்த, தீபாவளிக்கு முப்பத்தைந்து ரூபாய்க்குச் சித்தி எடுத்துத் தந்த கத்தரிப்பூ நிற நூல் புடவையை உடுத்திக் கொண்டு வந்திருந்தாள். முன்தினம் சோப் போட்டு இரவில் தலையணைக்குக் கீழே மடித்து வைத்து 'பிரெஸ்' செய்த வெள்ளைச் சோளி.

ஐந்தாறு பேர்களுடன் பேசிக் கொண்டு நின்ற ராம்குமார் இண்டர்வியூ நேரம் நெருங்கியதும் அவர்களைக் கீழே அனுப்பி விட்டுத் தனியாக வந்தான். பத்மாவின் பக்கத்தில் அமர்ந்தான். ''எக்ஸ்யூஸ் மீ, லாக்டோ மீட்டர்னு என்ன மேடம்?'' என்றான்.

பத்மா ராம்குமாரைப் பார்த்தாள். வளர்த்தியாக, சிவப்பாக இருந்தான், எடுப்பான மூக்குக்குக் கீழே அரும்பும் மீசை. பாதிக் கண்களை மறைத்தபடி இமைகள்



மனைவி: ''எப்பவுமே நீங்க இப் படித்தான்! நான் கேட்டா மட்டும் கொடுக்க மனசு வர்ராது!''

கவிழ்ந்து கிடந்தன. கன்னங்களில் செல்வச் செழிப்புத் தெரிந்தது.

''மூணு பேர் கிட்ட லாக்டோ மீட்டர் பத்திக் கேட்டிருக்காங்க. யாருமே பதில் சொல்லலே. நம்மகிட்டேயும் அதே கேள்வியைக் கேட்கலாம்'' என்றான்.

''Instrument used for measuring the purity of milk. பால்ல தண்ணி கலந்திருந்தா...'' என்று பத்மா ஆரம்பித்தாள்.

''யா யா. இப்ப ஞாபகம் வருது. தெரிஞ்சுக்கிட்டேன். மேடம். தாங்க் யு''

இண்டர்வியூ முடிந்து எம். எம். சி. தலைவாயிலைப் பத்மா கடந்து கொண்டிருந்த போது ராம்குமார் பைக்கை அவளருகே நிறுத்தினான். ''எப்படிச் செஞ்சீங்க?''

''எல்லாத்துக்கும் பதில் சொல்லிட்டேன். கொஸ்சின் எல்லாம் ஈஸியாத்தான் இருந்தது. லாக்டோ மீட்டர் கேட்டாங்களா?''

''இல்லே. எல்லாம் ஜெனரல்தான்.''

''எப்படிச் செஞ்சீங்க?''

''ஸோ ஸோ.''

அவனுடைய தோற்றமும் பேச்சும் அப்போது அவளுக்குள் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. பைக் கிளம்பியபோது அவனுடைய பெயர் என்னவாக இருக்கும் என்று ஊகிப்பதில் ஒரு விநாடியைச் செலவழித்தாள். அப்புறம் அவனை மறந்துவிட்டாள். மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைக்காவிட்டால் என்ன செய்வது, சிற்றப்பா என்ன சொல்லுவார் போன்ற கவலைகள் அவளை வாட்டத் தொடங்கின.

மருத்துவப் படிப்புக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட மாணவர்களின் பட்டியல் பத்திரிகையில் வெளியான அன்று தன்னுடைய எண்ணை அவநம்பிக்கையுடன் பல முறை பார்த்தாள். சிறகில்லாத தேவதையாகப் பறந்தாள். வாழ்க்கையின் கடின நிதர்சனங்களை ஏராளமாகச் சந்தித்துப் பழக்கப் பட்டவள், முதல் முறையாகத் தன் வாழ்க்கை பிரகாசமானதாக மாறிக் கொண்டு வருவதாக நம்பினாள்.

டிஸெக்ஷன் ஹால் நீளமாக விசாலமாக ஆஸ்பத்திரி வார்டு போல் இருந்தது: வார்டில் படுக்கைகள் விலகி, விலகி இரண்டு வரிசைகளில் கிடக்கும். இங்கே படுக்கைக்குப் பதிலாக அதே அளவில் உயரமான ஸ்டீல் மேஜைகள். தலையணைக்குப் பதிலாக மரப் பலகையிலான 'ஹெட்ரெஸ்ட்.'

மனித உடல்கள் அந்த மேஜைகளின் மீது மல்லாந்து பிறந்த மேனியாக, கால்களை நீட்டி; கரங்களை இரு பக்கங்களிலும் விரித்






துக்கொண்டு கிடந்தன. அந்த உடல்களின் மீது பூசப்பட்டிருந்த ஃபார்மாலின் 'குப்' பென்று ஒருவித நெடியைப் பரப்பியது.

ராம்குமார் கண்ணில் படாததால், அவனைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ளும் துணிவு இல்லாததால், வெகு நாட்களாகத் தலைமறைவாகியிருந்த தனிமையுணர்வு பத்மாவின் மனத்தைக் குரூரமாகத் தாக்கியது. அப்பாவும் இறந்தபோது அனுபவித்த கொடூரமான தனிமையை உணர்ந்தவளாய் டிஸெக்ஷன் ஹாலின் வாயிலில் தயங்கி நின்றாள். அடிவயிற்றில் புரியாத பயம் திரண்டு கொண்டிருந்தது.

உள்ளே போய்விட்டுச் சுறுசுறுப்பாகத் திரும்பி வந்தாள் டெய்சி. ''பத்மா நமக்கு அந்த முதல் டேபிள்டீ. வா போகலாம். ஏன் இப்படி வாசல்லேயே நின்னுட்டே?'' என்று கையைப் பிடித்து இழுத்தாள்.

அசைவற்றுக் கிடந்த உடல்களுக்கிடையே பத்மா மெல்ல இயந்திர கதியில் நடந்தாள். இரு பக்கங்களிலும் ஆண் பெண் உடல்கள். முதியவர்கள், வாலிபர்கள், இளம் பெண்கள் சில கண்களை விரித்து முறைத்தன. வாயை 'ஆ' வென்று திறந்தபடி ஒரு வாட்டசாட்டமான இளைஞன். கூந்தல் மழிக்கப்பட்ட ஒரு பெண்ணின் தலை மேஜையின் விளிம்புக்கு வெளியே விகாரமாய்த் தொங்கியது.

''தைரியமா நட. இப்பப் பயந்தேன்னு, தர்ட் இயர்ல ஸ்டெத்தைத் தோள்லே போட்டுக்கிட்டு உயிருள்ள நோயாளிகளுக்கு நடுவில ஸ்டைலா நடக்க முடியாதுடீ'' என்றாள் டெய்சி. ''பயம் அருவருப்பையெல்லாம் மூட்டை கட்டி வெச்சிரு.''

முதல் மேஜையை அடைந்தனர். பாண்டியன் அங்கே தயாராக நின்றான்.

''இந்த டேபிளுக்கு மூணு பேர்தானா?'' என்று பக்கத்தில் வந்த மெலிந்த டியூட்டர் கேட்டார். மூக்குக் கண்ணாடியை ஒரு பக்கம் அசைத்து அட்ஜஸ்ட் செய்தபடி பத்மாவையும் டெய்ஸியையும் பார்த்தார். கையில் இருந்த லிஸ்டைப் புரட்டினார். ''பாண்டியன், பத்மா, ரேச்சல் டெய்சி பிரியராணி, ராம்குமார்... இன்னும் யார் வரல?''

''ராம்குமார்'' என்றான் பாண்டியன்.

பத்மாவின் மனத்தை மறுபடியும் ஒருவித பீதி ஆக்கிரமித்தது. துணிச்சலை வரவழைத்துக் கொண்டு மேஜைமீது இருந்த உடலைப் பார்த்தாள். சிவப்பான உடல். தலை இல்லை.

பக்கத்து மேஜையருகே நின்ற சுப்பையா நகர்ந்து வந்தான். ''பரீட்சைல பெயிலாகியிருப்பான். வீட்ல திட்டியிருப்பாங்க. ரயில்ல தலையைக் குடுத்திருக்கான்'' என்றான்.

''அம்பத்தஞ்சு வயசிலா பரீட்சை எழுதி பெயில் ஆகிறது?'' என்றான் பாண்டியன்.

உடனே டெய்சி ''இதுக்கு ஐம்பத்தஞ்சு இருக்காது. முப்பதுதான் இருக்கும்'' என்றாள்.

''அப்படின்னா பெண்டாட்டி திட்டியிருப்பா. இல்லேன்னா காதல் தோல்வியா இருக்கும்'' என்று சொல்லிவிட்டுச் சுப்பையா தன் மேஜைக்கு நகர்ந்தான்.

டியூட்டர் அந்தத் தலையற்ற உடலின் ஒரு கையைத் தூக்கினார். அதன் உள்ளங்கையைக் கத்தரிக்கோலின் முனையினால் தொட்டுக் காட்டினார். ''பாமார் அபோநியூரோசிஸ். இஸ் டிரையாங்குலர் போர்ஷன்...'' என்று ஆரம்பித்தார்.

பத்மாவின் இதயத்தில் லேசான படபடப்பு. ஃபார்மாலின், கார்பாலிக் அமில நெடி நாசியில் ஏறித் தலைச் சுற்றலை ஏற்படுத்தியது. வாந்தி அலை வயிற்றிலிருந்து கிளம்பித் தொண்டையில் குமட்டியது. ராம்குமார் இனி வரமாட்டானா?

பாண்டியன் பிராக்டிகல் மான்யுவலில் இருந்து வாசிக்க ஆரம்பித்தான். ''ரிமூவ் எனி ரெம்னன்ஸ் ஆப் பாமாரிஸ்...''

அவன் படிக்கப் படிக்க, டியூடர் கூரான ஸ்கால்பெலால் உள்ளங்கையில் விரல்களுக்குக் கீழே இடமிருந்து வலமாகக் கிழித்தார். விரல்களுக்கு நடுவே செங்குத்தாக த்தசையைக் கிழிக்க ஆரம்பித்தார்.

அந்தப் பிணத்தின் மணிக்கட்டுக்குக் கீழே பச்சை குத்தப்பட்டிருந்த பூ முதல் முறையாகப் பத்மாவின் கண்களில் பட்டது. மறுநொடி அப்பாவின் கரத்தில் இருந்த பச்சைத் தாமரைப்பூ அவள் எதிரே சுழன்றபடி வந்தது. 'பத்மா, பத்மா' என்று அப்பா கூட்டத்தில் நின்று கூப்பிட்டார். மாரியம்மன் திருவிழா இரைச்சல்களுக்கிடையே ஃபார்மாலின், கார்பாலிக் அமில நெடி. ராட்சஸ ராட்டினத்தில் பலூன்களோடு சுழன்றாள்.

டிஸெக்ஷன் ஹால் காலுக்குக் கீழே மெல்ல நழுவியது. முகத்திலிருந்து இரத்தம் பிரிந்தது. வெளிச்சம் படிப்படியாகக் குறைந்து மங்கி, கருக்கிருட்டாகி, காரிருளாகி...

(தொடரும்)

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப்



# போட்டி '83

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறு கதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000** |
| **இரண்டாவது பரிசு** | **ரூ. 500** |
| **மூன்றும் பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 250 வீதம்)** | **ரூ. 500** |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

* கதைகளை அனுப்பக் கடைசி தேதி ஜூன் 15.

* உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.



**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032**




# களைகள்

**கோ**டைக் காலம் ஆரம்பமாகி விட்டது.

ஸம்மர் ஹாலிடேஸுக்குக் குழந்தைகளுக்கு லீவு விட்டு விடுவார்கள். இந்த லீவுக்காவது காஷ்மீர் போக வேண்டும். இப்படித்தான் வருடா வருடம் நினைத்து நினைத்து அதைச் செயல்படுத்த முடியவில்லை. மல்லிகா ஏதோ யோசித்துக்கொண்டிருந்த போது அவளின் பிள்ளை ரமேஷ் பள்ளியிலிருந்து ஓடி வந்தான்.

''அம்மா... அடுத்த வாரம் எங்க ஸ்கூல் டே. அதுக்கு எங்க ஸ்கூல்லே நான் தான் பாடப் போறேன்... டான்ஸ் கூட ஆடப் போறேன்''

மல்லிகா தன் மகனைப் பெருமையுடன் பார்த்தாள்.

'அட... இந்த நண்டு ஸ்டேஜ் ஏறி ஆடப்போகிறதா? என்ன தெரியும் இதுக்கு?'

''என்னடா ஆடப் போறே?''

''அதுதான் சஸ்பென்ஸ்!''

ரமேஷ் சிரித்தபடி உள்ளே போன போது ரேழியில் ஜபமாலையை உருட்டிக் கொண்டிருந்த மீனுப்பாட்டி.

''ஏண்டா கண்ணு இத்தனை லேட்?''— என்று கேட்டாள்.

''பாட்டி... நான் ஸ்கூல் டேலே டான்ஸ் ஆடப் போறேன்... ப்ராக்டிஸ் பண்ணினேன்... அதான் லேட்...''

''என் செல்லமே... சரி, கை கால் அலம்பிண்டு டிபன் சாப்பிட வா. ... எல்லாம் எடுத்து வைக்கறேன்'' — என்று பாட்டி 4-வது படிக்கும் தனது ஒன்பது வயதுப் பேரனைப் பெருமையுடன் பார்த்தாள்.

மீனுப் பாட்டி நல்ல பழுத்த பழம்... தாத்தாவும் பாட்டியும் கிராமத்தில் நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

பாட்டிக்குத் தன் கிராமத்து வீடு உண்டு. வயக்காடு உண்டு. அதில் வரும் வருமானமும், விளைச்சலும் உண்டு என்று இருப்பவள்.

அந்தக் காலக் உடம்பு. உழைத்து உரம் ஏறின உடம்பு. இந்த எழுபது வயதிலும் வரப்பிலும், மேட்டிலும் சரளமாக நடக்கும் தெம்பு. தாத்தா, பாட்டி வார்த்துத் தரும் கல்லு தோசையைக் கனிசமாகத் தூக்கில் போட்டு எடுத்துக் கொண்டு வக்கணையாய்த் தொட்டுக் கொள்ள அதன் மேலேயே மிளகாய்ப் பொடிபோட்டுஎண்ணெய் தடவி, பட்டுப் பட்டாக மிருதுவாகத் தோசையை ஒரு டஜன் எடுத்துக் கொண்டு வயக்காட்டுப் பக்கம் காலையில் போனாராஞல் மாலைதான் திரும்புவார். அந்த நிலத்தில் கடலையை மேற்பார்வை பார்த்து, சோளக் கதிர்களைச் சுற்றிப் பார்த்து, கிணற்றில் தண்ணீர் இருக்கிறதா இல்லை தூர் எடுக்க வேண்டுமா என்று பார்த்து... இப்படி இவர் பார்த்துப் பார்த்து வளர்த்த நிலம் அது... 'களை' களை உடனுக்குடன் களைந்து வளர்த்த நிலம்.

பிள்ளை ரகுராமனுக்குச் சென்னையில் பெரிய வேலை.

மருமகள் மல்லிகாவுடனும், பேரன் ரமேஷுடனும் அவன் மகிழ்ச்சியாக இருக்கிறான்.

இவர்கள் அங்கு போவதே இல்லை.

ஒரு மனக்கசப்பு வந்து பிரிவதைவிட, அது வராமலிருக்க அணுகாமல் இருப்பதே மேல் என்று நினைப்பவள் மீனுப்பாட்டி.

''அடியே மீனு... நீ வாத்துத் தந்த தோசைக்காகவே கார்த்தாலே நிலத்துப் பக்கம் ஊம்பஞம் போல இருக்கு... தோட்டக்காரன் பொன்னன் கமலையிலே தண்ணீர் பாய்ச்சறப்போ அந்த வாய்க்கால் கரைப் பக்கமா உக்காந்துண்டு தென்னமர நிழலோரமா நீ கட்டித் தர்ற தோசையைத் தின்றதுலே இருக்கிற ஆனந்தம் இருக்கே. அது இந்தப் பட்டணத்துப் பசங்க பங்களாவிலே இருக்கிற ஏஸி பீஸி எல்லாம் இதுக்கு உறை போடக்காணாதுடி... பிரும்மானந்தம்'' — என்று தாத்தா பாட்டியைப் புகழுவார்.

ஒவ்வொரு தடவையும் மீனுப்பாட்டி தன் பிள்ளையை லீவுக்குக் கிராமத்துக்கு வரச் சொல்லிக் கடிதம் போடுவாள். ஆனால் அவர்கள் வர மாட்டார்கள். தன் மருமகளுக்கு இந்தப் பட்டிக்காடு ஒத்துக்கொள்ளாது என்றுதெரியும்!

இந்தத் தடவை மீனுப் பாட்டி பிள்ளையிடம் வந்ததே ஒரு விபத்துத்தான். திடீரென்று ரகுராமன் வேலை பார்க்கும் கம்பெனியில் அவனை அயல் நாட்டுக்குப் பயிற்சிக்கு அனுப்பி விட்டார்கள். அவன் அவசரம் அவசரமாக அம்மாவிற்கு ஒரு கடிதம் போட்டான்.

'இங்கே மல்லிகாவும் ரமேஷும் தனியாக இருக்கிறார்கள். ஒரு மாதம் இங்கே வந்து துணைக்கு இருக்க வேண்டும்' என்று எழுதி இருந்தான். மகனின் வேண்டுகோளைத் தட்ட முடியவில்லை.

தவிர பேரன் ரமேஷுடன் கொஞ்ச நாட்களாவது இருக்க வேண்டும் என்று பாட்டிக்கு ஆசை.

பாட்டி கிளம்பி விட்டாள்.

தாத்தாதான் பச்சைக் குழந்தை மாதிரி பிடிவாதம் பிடித்தார்.

''வேணும்னு உன் பிள்ளை ஒரு ஆள் போட்டுப் பார்த்துக்கறான். இதுக்கு உன் பிராணனை வாங்குவானேன்? இந்த ஒருமாசமும் என்னை யார் கவனிச்சுப்பா?''

பாட்டி சிரித்தாள்.

கடைசியில் தாத்தாவைச் சமாதானப் படுத்தி ஒரு மாதம் பொறுத்துக்கொள்ளச் சொல்லி, பருப்புப் பொடி, கொத்தமல்லிப் பொடி – என்று வகை வகையாய்ப் பொடி பண்ணி வைத்து விட்டு, மசக்கைப் பொண்ணுக்குப் பண்ணி வைப்பது போல் திறுக திறுசாக டின் நிறைய முறுக்கும், சீடையும் பண்ணி வைத்து விட்டுத்தான் பாட்டி பட்டணம் கிளம்பினாள்.

தாத்தா அந்தக் காலம். நன்றாகச் சமைப் பார்.





## இந்திரா காந்தியின் வருத்தம்!

சமீபத்தில் அஸ்ஸாமுக்குப் போய் வந்தார் வாணி ஜெயராம்.

கௌஹாத்தியில் உள்ள விவேகானந்தா சென்டர் ஆதிவாசிகளின் கல்விக்காக நிதி திரட்டியது. அது தொடர்பாகக் கச்சேரி. திறந்தவெளி அரங்கில் நாலாயிரம் அஸ்ஸாமிய மக்கள் அமைதியாக ரசித்துக் கேட்டனர். அஸ்ஸாமிய மொழியிலேயே இரு பாடல்களைக் கச்சேரியில் சேர்த்துக்கொண்டாராம்.

இது அவரது இரண்டாவது டிரிப். ''எல்லாம் அங்குள்ள காமாக்கியா கோவிலின் மகிமை!'' என்கிறார். அது மன்மதனின் கோவிலாம். அங்கு ஒருவர் போய்த் தரிசனம் செய்து வந்தால் மீண்டும் இரண்டு முறை அவர்களைக் கௌஹாத்திக்கு வரவழைக்கும் சக்தி படைத்த தெய்வமாம்!

''நீங்கள் படம் எடுப்பதற்கு முன்பே பின்னணி கொடுத்து விடுகிறீர்கள். படம் வெளிவந்து உங்கள் பாடல் சிறப்பாக இடம் பெற்றிருப்பதாக எந்தப் படத்தைப் பார்த்து நினைக்கிறீர்கள்?''

''சங்கடமான கேள்வி. இருப்பினும் சொல்கிறேன். ''நிழல் நிஜமாகிறது படத்தில் ஷோபாவை சரத்பாபு கெடுத்து விடுவார். அந்தப் பெண்ணுக்குச் செவிடாக நடிக்கும் அனுமந்து ஆதரவு தருவார். இந்தக் காட்சியில்,

''இலக்கணம் மாறுதோ
இலக்கியமானதோ''

என்ற எனது பாடல் ஒலிக்கும். படம் பார்க்கும்போது மெய் சிலிர்த்தது. இது போலவே சங்கராபரணம் படத்தில் 'ப்ரோசேவா' பாடல்.''

''சமீபத்தில் தங்களைக் கவர்ந்த செய்தி?''

''ஒரு அயல் நாட்டு நிருபருக்கு அளித்த பேட்டியில் நமது பிரதமர் இந்திரா காந்தி தமக்கு ஓரளவு பாடத் தெரியும் என்றாலும் அதை முறைப்படி கற்கவில்லையே என்று ஆதங்கத்துடன் கூறியிருந்தாரே, அது!''

பேட்டி: மன்னை சௌரிராஜன்

**பா**ட்டி சென்னை வந்து கிட்டத்தட்ட ஒரு மாதமாகப் போகிறது... இந்த ஒரு மாதமும் பாட்டிக்குப் பல விவரங்கள் அத்துப்படி ஆகவில்லை.

ஆசையாக முறுக்குப் பண்ணலாம் என்றால் —

மருமகள் 'அவனில்' பிஸ்கட் பண்ணுகிறேன் என்கிறாள்.

கடலை உருண்டை பிடிக்கலாமா என்று யோசித்தால் 'சப்பாத்தியும் சப்ஜியும் தான் உங்க பேரனுக்குப் பிடிக்கும்' என்கிறாள்.

குருமா என்று எதையோ நாத்தம் நாத்தமாகப் பண்ணுகிறாள்.

இந்த ரமேஷ் நன்கு நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு சாப்பிடுகிறானே!

இவர்களுக்குத் தன்னுடைய தேவையே தேவை இல்லையோ?

''நீங்க ஏம்மா வீணா சிரமப்படறேள்? இந்தப் பத்தாம் பசலி சமையல் எல்லாம் உங்கள் புள்ளை காலத்தோட சரி... இப்போது இதெல்லாம் இவாளுக்குப் புடிக்கறதில்லை தெரியுமா?'' — என்று மல்லிகா சொல்லி மண்டையில் ஒரு தட்டுத் தட்டி உட்கார்த்தி வைத்து விடுகிறாள்!

மல்லிகா ரமேஷை வளர்ப்பதைப் பார்த்தால் பாட்டிக்குப் பத்திக் கொண்டு வந்தது. குழையச் சோத்தை வடித்துக் குழந்தைக்குப் பிசைந்து வயிறு ரொம்பப் போட மாட்டாளோ?

நான் என் பிள்ளையை இப்படியா வளர்த்தேன்? ஒரு கிண்ணம் 'நிறைய பருப்பு சாதம் நெய் - போட்டுப் பிசைந்து காய்கறியுடன் காக்கா கதையைச் சொல்லி ஊட்டினால் ஒரு நிமிஷத்தில் சாதம் பறந்து போய் விடாதோ?

தான் ஏனோ இந்த வீட்டில் ஒதுக்கப்பட்ட ஒரு உணர்வு பாட்டிக்கு!

தன் மகன் ஊரிலிருந்து திரும்பும் நாளை எதிர்பார்த்துக் காத்திருந்தாள் பாட்டி.

இதற்குள் தாத்தாவிடமிருந்து இரண்டு லெட்டர்கள் வந்து விட்டன.

கல்லுத் தோசையை நினைவுபடுத்தி, அவள் சமையலை நினைவுபடுத்தி....

இங்கு தனக்குப் பாராட்டும் இல்லாமல் இல்லாமல் இருப்பது பாட்டிக்கு மகா கஷ்டமாக இருந்தது.

பேரனுடன் மாலை வேளையில் பேசிப் பொழுதைக் கழிக்கலாம் என்றால் — இந்த ஒன்பது வயதில் அவன் என்ன கலெக்டர் உத்தியோகமா பார்க்கப் போகிறான்? ஏதோ டியூஷனும்... படிப்பாம்.

பிறகு டிராமாம்! அது என்ன எழவோ? பாட்டிக்கு ஒன்றுமே புரியவில்லை. இந்த நிலையில் தான் அந்த 'ஸ்கூல் டே' வந்தது.

''எனக்கு ஒரு மீட்டிங் இருக்கும்மா.... நீங்க போய் உங்க பேரனோட டான்ஸைப் பாட்டை எல்லாம் கேட்டுட்டு வாங்கோ. பெஸ்ட் ஆப் லக் ரமேஷ்!'' — என்ற மல்லிகா தலை போகிற அவசரமாய் வெளி

# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு
நம்பகமான
க்ளாக்ஸோஸ்-டியின்
புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளுகோன்-டி**®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளுகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்-க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளுகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளுகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட-விளையாட்டிலும், வேலையிலும். க்ளுகோன்-டி—உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.






வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளுகோஸ் பவுடர்—**க்ளாக்ஸோ** அளிக்கிறது.

HTB-GL-4737 TL

# வாசகர் போட்டி: நாலு வார்த்தைகள்:

## பரிசு ரூ. 250

இந்த இதழ் கதை, கட்டுரைகளை அச்சக்கோர்த்து மிஷினுக்குக் கொண்டு போகும்போது துரதிர்ஷ்ட வசமாக நாலு வார்த்தைகள் உதிர்ந்து போயின. அதுவே வாசகர்களின் அதிர்ஷ்டமாகவும் அமைகிறது. இந்த இதழைக் கவனமாகப் படித்து எந்த எந்த இடங்களில் அந்த நாலு வார்த்தைகள் உதிர்ந்து போயிருக்கின்றன என்று கண்டுபிடியுங்கள். பிறகு அந்த நாலு வார்த்தைகள் என்னவாக இருக்கும் என்று பொருத்தமாக ஊகித்துக் கீழே உள்ள கூப்பனில் எழுதுங்கள். நாலு வார்த்தைகளையும் சரியாக எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புகிறவருக்கு ரூ. 250 பரிசு! ஒருவருக்கு மேல் சரியாக எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். 10 பேருக்கு மேல் சரியான விடை எழுதினால் குலுக்கல் முறையில் பத்துப் பேர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

## முடிவு தேதி 16-5-83.

உறையின் மேல் ''நாலு வார்த்தைகள்'' என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

நாலு வார்த்தைகள்:

1.

2.

3.

4.

என் பெயர்:

விலாசம்:

கையெழுத்து:

பில் கிளம்பி விட்டாள்! என்ன தாயார் இவள்?

முதல் வரிசையில் அமர்ந்து கொண்டு அந்தக் காலத்தில் அவள் மகன் ரகு போட்ட கட்டபொம்மன் நாடகத்தைப் பாட்டி எத்தனை சந்தோஷத்துடன் பார்த்தாள்!

''வானம் பொழிகிறது... பூமி விளைகிறது'' — என்று ரகு நீளமாக வசனம் பேசப் பேச ஒட்டு மீசை கீழே விழ....

ஒரு பக்க மீசையுடன் அவன் வசனம் பேசியதை இப்போது நினைத்தாலும் பாட்டிக்குச் சிரிப்பு வருகிறது!

பாட்டி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

திடீரென்று கைதட்டல்...

பாட்டி சுய உணர்வு பெற்ற போது...?

மேடையில் ரமேஷ் நின்று கொண்டிருந்தான்.

சின்ன உருவம்... அவனைச் சுற்றிக் கலர் விளக்குகள் ஒளி பரப்பின...

சுற்றி இருப்பவர்கள் கைதட்டுகிறார்கள்!

என்ன பாட்டு இது?

அது என்ன... ஆ... ஊ... என்று முனகல் சப்தம்...?

பக்கத்தில் இருப்பவர்களிடம் பாட்டி விவரம் கேட்க அவர்கள் சொன்ன போது பாட்டி திகைத்துப் போனாள்.

சினிமாப்பாட்டு! அதுவும் ஒரு காதல் காட்சிப் பாட்டு!

அடுத்த பாடல்...?

''நிலாக் காயுது''

ஆ... ஊ... ஊ... உம்... ஊ உம்...

கடவுளே இது என்ன கொடுமை?

இதற்கா கைதட்டு?

தனக்கு எதற்குப் பாராட்டு கிடைக்கிறது என்று புரியாமலே... அந்தக் குழந்தை ஏமாந்து போகிறதே!

டேய் ரமேஷ் புகழ்ச்சிக்கு மயங்கின காகமாயிட்டியே நீயும்!

குள்ள நரி மாதிரி உன்னைச் சூழ்ந்திருக்கும் இவர்கள் ஏதோ ஒரு சினிமாவில் பார்த்த ஒரு காதல் காட்சியை உன் மூலம் நினைவு படுத்திக் கொண்டு கைதட்டித் தங்கள் வக்கிர உணர்வுகளைத் தீர்த்துக் கொள்கின்றனர்!

அதற்கு நீ பலியாகிப் போகிறாயே?

என் பிள்ளையை இந்த வயதில் ஸ்லோகம் சொல்லிக் கொடுத்து வளர்த்தவள் நான்! இவர்கள் என்ன வளர்க்கிறார்கள்?

பள்ளிக்கூடத்தில் பாடமும், பாசமும் கற்றுத் தருவதாக நினைத்திருந்தேனே!

பாசத்துக்குப் பதில் 'ஆபாசம்' கற்றுத் தருகிறார்களா? என்ன கொடுமை?

பாட்டி திகைத்தபடி அமர்ந்திருக்க...

கொஞ்ச நேரத்தில்....

டிஸ்கோ டான்ஸாம்!

ஆடுபவர் ரமேஷ் என்று அறிவித்தனர்.

மீண்டும் பெரிய கைதட்டல்.

அந்தச் சின்னக் குழந்தை இடுப்பை வளைக்கும்போதெல்லாம் கைதட்டல்! மாரை ஆட்டும்போதெல்லாம் விசில் சப்தங்கள்.

இரண்டு குழந்தைகளும் மேடையில் என்ன என்னவோ எப்படி எப்படியோ ஆடினார்கள்!

நிகழ்ச்சி பூராவும் கை தட்டல்கள்.

இதுதான் டிஸ்கோவா? இந்த எட்டு வயது ஒன்பது வயதில் அந்தக் காலத்தில் எங்களை எல்லாம் ஆண்களோடு சேர்ந்து விளையாடினால் காதறுந்து போகும் என்றும், சின்னப் பையன்களைப் பார்த்து, பெண்களோடு சேர்ந்தால் மூக்கறுந்து போகும் என்றும் சொல்லிப் பெரியவர்கள் பயமுறுத்தி வைத்திருந்தனர். நாங்களும் அதை நிஜமென்று நம்பிப் பயந்து கொண்டிருந்தோம்.

அதுகூட 'ஏமாற்று'த்தான்!

ஆனால் நல்லதுக்காகச் செய்கிற ஏமாற்று.

நெஞ்சில் தீயவைகளைக் கண்டு பயப்படுவதற்காகக் காட்டப்படுகின்ற பூச்சாண்டிகள்.

ஆனால் இன்று....?

சின்னச் சின்னக் குழந்தைகள் இப்படி இத்தனை பேரும் கைதட்ட டிஸ்கோவும் குஸ்திச் சண்டை நடனமும் ஆடிப் பழகினால் இந்தப் புகழ் போதையின் வெறி எப்படி ஆகும்?

எப்படி மாறும்?

பாட்டி பிரமித்துப் போய் அமர்ந்திருந்தாள்.

அப்போதே அவள் மனம் தீர்மானித்தது.

நான் என் மருமகளின் சமையலில் தலையிடவில்லை!

அவளின் சமூகப் பணிகளில் தலையிடவில்லை.!

ஆனால் என் பரம்பரையின் வளர்ச்சியில் இனி நான் தலையிட்டே ஆக வேண்டும். நாளைக்கு முதல் காரியமாகக் கிராமத்துக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும். விஷயத்தைச் சொன்னால் அவர் புரிந்து கொள்வார். தினம் தினம் வயலில் போய்ப் புதிதாக முளைக்கிற 'களை'களை உடனுக்குடன் அகற்றிப் பழக்கப் பட்டவர் தாத்தா!

'களை'கள் எடுத்து என் குடும்ப நிலத்தில் நல் விளைச்சல் காண வந்தவள். அன்புத் தண்ணீர் பாய்ச்சி அற விதைகளை விதைக்க வந்தவள். குடியானவன்... பண்ணையார் தகராறு வரலாம். பரவாயில்லை... விதைக்கிற காலத்தை வீணடித்து விட்டு அறுவடை காலத்தில் அரிவாளைத் தூக்கிக்கொண்டு போனால் காலி நிலம்தான் மிஞ்சும். நான் விளைநிலத்தைக் காண வந்த உண்மையான விவசாயி!

மீனுப் பாட்டியின் தீர்மானங்கள் முடிந்த போது நிகழ்ச்சிகளும் முடிவடைந்து விட்டன.

பாட்டுக்கும் நடனத்துக்கும் முதல் பரிசு பெற்றவர் – என்று ரமேஷின் பெயரை ஒலிபெருக்கி அறிவித்துக்கொண்டிருக்கமீனுப் பாட்டி தன் பேரனுடன் அந்தக் கூசும் வெளிச்சத்தை விட்டு வெளியே நடந்து கொண்டிருக்கிறாள்.

# ஒரு சங்கமத்தைக் தேடி

## வாஸந்தி

**14**

**கா**ர்த்திக் வியப்புடன் விசாலத்தைப் பார்த்தான். அவள் முகத்தில் தெரிந்தது சந்தோஷமா நிம்மதியா என்று அவனால் நிச்சயமாகக் கணிக்க முடியவில்லை. அவள் சொன்ன விஷயத்தினால் அவனுள் ஏற் பட்டிருந்த மகிழ்ச்சியில் அவளது முக பாவத்தைப் பற்றி அந்த நிமிஷம் அதிகக் கவலை ஏற்படாதது அவனுக்கே ஆச்சரிய மேற்பட்டது. அவன் அவளுடைய தோளை லேசாகப் பற்றினான்.

''இதுக்கும் நான் உங்களுக்குத்தான் தேங்க்ஸ் சொல்லணும் அத்தே!''

முருகன் கோவிலின் வெளிப்பிராகாரச் சுவரில் உட்கார்ந்திருந்த விசாலம் தூரத்தில் தெரிந்த குதுப்மினாரையும் அடுக்கு மாடிக் கட்டிடங்களையும் சில விநாடிகள் பார்த்தாள். பார்வையை அகற்றாமல் மெல்லிய குரலில் சொன்னாள்:

''எனக்கும் இதுக்கும் சம்பந்தமே இல்லே. உனக்கு தாங்க்ஸ் சொல்லணும் போல இருந் தால் சந்திரிக்குள்ளே நிக்கிறானே அவன் கிட்டச் சொல்லு!''

அத்தையின் முக பாவமும், தூரப் பார் வையும், நிதானப் பேச்சும் மேலே மிதந்த மனசை, கன்றுமடித்தனமாகப் பறக்க யத்த னித்த கற்பனைகளை, கீழே இறக்க முனைந் தன. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

''நீங்கதான் அத்தே அவனுக்கு ஏஜண்ட்!''

அத்தை சிரிக்காமல் உட்கார்ந்திருந்தது அவனுக்கு ஏமாற்றத்தை அளித்தது.

''எங்கிட்டேருந்து எதையும் மறைக்கமாட் டேன்னு நினைச்சேன்!''

அந்த ஆதங்கம்தான் அத்தையின் வருத் தத்துக்குக் காரணமா? நல்ல சமாச்சாரம் என்று சொல்லிவிட்டு ஏன் இப்படி உட் கார்ந்திருக்கிறாள்?

''உங்களுக்கு இதிலே சம்மதமில்லையா அத்தே?'' என்றான் மெல்லிய குரலில்.

சட்டென்று உலுக்கப்பட்டவள் போல், விசாலம் அவனைத் திரும்பி நிமிர்ந்து பார்த் தாள். தோள் மேல் அமர்ந்திருந்த அவனது கையைத் தன் கையில் வைத்தபடி கனி வுடன் சொன்னாள்.

''இந்த மாதிரி விஷயங்கள்ளே உன்னு டைய சந்தோஷம்தான் முக்கியம். 'நடக்கிற தெல்லாம் ஈச்வர சங்கல்பம்னு' அன்னிக்கே சம்மதிச்சிட்டபோது உனக்கென்ன சந்தே கம்?''

''உங்களுக்குச் சம்மதமா?''

அத்தை மழுப்பலாகச் சிரித்தாள். மறுபடி குதுப்மினாரைத் தேடினாள்.

''எனக்குச் சொல்லத் தெரியல்லே'' என் றாள் மிருதுவாக. ''சின்ன வயசு வரைக்கும் தான் ரோட்டைத் தாண்டறபோது கையைப் பிடிச்சுண்டு போய் அந்தண்டை விடலாம். தனியாத் தாண்டற வயசு வந்தப்புறம் பொறுப்பு உன்னுடையது. நீயா பாதையைப் பார்த்து நடக்க வேண்டியதுதான்.''

விசாலத்தின் குரல் நெகிழ்ந்து போயிருந் தது. சிரிப்பில் கண்ணீர் தெரிந்தது.

''ஒரு வேடிக்கை தெரியுமோ கார்த்திக்? அப்பவும் நீ ஜாக்கிரதையாத் தாண்டணு மேங்கற கவலை எனக்கு இருக்கும். கவனக் குறைவினாலே காயம் பட்டுக்காம இருக் கணும்கிற பயம் எப்பவும் இருக்கும்...''

அத்தையின் பயம் அவனுக்கு அதீதமாகப் பட்டது. அவன் வாஞ்சையுடன் புன்ன கைத்து அவளருகில் உட்கார்ந்தான்.

''நான் ரொம்ப யோசிச்சுத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன் அத்தே. தாரா வுடைய டிரஸ்ஸைப் பார்த்து நீங்க தப்பா எடை போடக் கூடாது. அவ ரொம்ப நல்ல பெண். கொஞ்சம் கூடப் போலித் தனமோ ஆடம்பரமோ இல்லாதவ.''

விசாலத்தின் முகம் மென்மையாக மலர்ந்தது.

''எனக்கு அதைப் பத்திக் கொஞ்சமும் சந்தேகமில்லே!''

'பின் எதைப் பத்திச் சந்தேகம்?' அவ னுக்குக் கேட்கத் தயக்கமாக இருந்தது.





''நேத்து தாராவுடைய பாட்டி ஒன்ணரை மணி நேரம் பேத்தியைப் பத்தின பெருமையைச் சொன்னதிலே அண்ணாவே இளகி இறங்கிவிட்டான்னு பார்த்துக்கோயேன்.''

குழப்பமும் திகைப்புமாக அவன் முணு முணுத்தான்.

''என்னாலே இன்னும் நம்ப முடியல்லே அத்தை. அப்பா நிச்சயமாத் தானாக இதுக்குச் சம்மதம் கொடுத்திருக்க மாட்டார். நீங்க சிபாரிசு செய்யாம...''

அத்தை லேசாகச் சிரித்தாள்.

''கல்யாணம்கிறது ரொம்பப் பெரிய விஷயம். அண்ணாவுக்கு ஏற்பட்ட கவலைகள் ரொம்ப நியாயமானது. அவன் பிள்ளை நீ. நான் என்ன சொல்ல இருக்கு? தாராவுடைய பாட்டியே நம்மாத்துச் சம்பந்தத்துக்காக வேண்டற மாதிரி வந்து பேசினது அவன் மனசை மாத்தியிருக்கும். உனக்கும் அந்தப் பெண்ணுக்கும் நடுவிலே இருக்கிற பிரியம் அவனுக்குப் புரியறதோ இல்லையோ, தெய்வ சங்கல்பம்னு ஒண்ணு இருக்கிறது அவனுக்குப் புரியறது.''

சுற்றுப்புறமும், காலை இளம் பொழுதும் மிக ரம்மியமாகத் தோன்றிற்று அவனுக்கு. அவனது வாழ்வின் ஒவ்வொரு திருப்பு முனையிலும் அவனைக் கொண்டு செல்ல, வழி காட்ட யாரோ சிநேகிதத்துடன் நிற்கிறாற் போல் மனசு சிலிர்த்தது. நேற்று மாலை அவன் சலிப்பும் ஆயாசமுமாக வெளியில் கிளம்பியதற்கும் இன்று இறக்கை முளைத்து மேலே மிதப்பதற்கும் எத்தனை வித்தியாசம்! அவன் கிளம்பிச் சென்றதும் திருப்பு முனையில் காத்து நிற்கிறாற் போல் தாராவின் பாட்டி கல்யாணம் பேச வந்திருக்கிறாள்! எத்தனை ஆச்சரியகரமான 'கோ-இன்ஸிடென்ஸ்' இது! உண்மையிலேயே சந்நிதிக்குள் நிற்கும் அந்த ஆசாமிக்கும் இதற்கும் ஏதோ சம்பந்தமிருக்க வேண்டும் என்று கிட்டத்தட்ட அப்பாவின் வார்ப்பில் நெகிழ்ந்து போன உணர்ச்சி கட்டத்தில் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

''பாட்டிகளும் அத்தைகளும் வாழ்க!''

அவன் இடைமறித்ததைக் கவனிக்காமல் அத்தை சொன்னாள்:

''ஏதோ ஒரு கவலை அந்த மாமிக்கு!''

''என்ன கவலை?''

''அத்தனை பெரிய மனுஷாளாத்து மாமி அண்ணா கிட்ட யாசகம் கேட்கிற மாதிரி எனக்குப் பட்டது. ''என் பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் இருக்கிற உலகமோ வேறே'ன்னு. அவாளுக்கு இந்தச் சம்பந்தத்திலே இஷ்டம் இருக்காதுதான். அவா உலகத்து மனுஷாளைத்தான் அவா புரிஞ்சுப்பா. ஆழமில்லாத விஷயத்தைப் புரிஞ்சுக்கறது சுலபம். ஆனா பெண்ணோட இஷ்டத்துக்குக் குறுக்கே நிற்க மாட்டா''ன்னா.

''நம்ம ரெண்டு பேர் அந்தஸ்திலேயும் பார்வையிலேயும் உலக வித்தியாசம் இருக்கும். இந்த விஷப் பரீட்சை வேண்டாம் மா''ன்னான் அண்ணா.

''அந்த மாமி கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தாள். அப்புறம் மெதுவாச் சொன்னாள்.



''நாமெல்லாம் ஒரே உலகத்தைச் சேர்ந்தவாதான் சுப்புஸ்வாமி. இந்த அந்தஸ்தும் பார்வைக் கோளாறும் அப்புறமா வந்தது. மனசோட ஒட்டாதது. உண்மையைச் சொல்றேன். எனக்கு இதெல்லாம் அலுத்துப் போயிடுத்து. ஒரு வேடிக்கை என்ன தெரியுமோ? என் பேத்திக்கும் அலுத்துப்போச்சு. நான் வேதாந்தம் படிக்கிறேன். கோயிலுக்குப் போறேன். அவ வேற ஏதோ தத்துவம் பேசறா. அதுதான் வித்தியாசம். அவளைப் பத்தி நான் ரொம்பக் கவலைப்பட்டுண்டிருந்தேன். உங்காத்துப் பிள்ளையைக் கல்யாணம் பண்ணிக்க அவ ஆசைப்பட்டது ரொம்ப ஆச்சரியமான விஷயம் மட்டுமில்லே. தெய்வாதீனமானதுன்னு நான் நினைக்கிறேன். உங்களுக்கு இஷ்டமில்லேன்னு நான் வற்புறுத்தல்லே. ஆனா என் பேத்தி தன் மனசை மாத்திக்க மாட்டாள், நிச்சயம்!''

—அப்படின்னு அந்த மாமி சொன்னபோது அதிலே ஒரு வார்த்தையும் பொய் யில்லேன்னு நான் நினேச்சுண்டேன்-'' அண்ணா பிரமை பிடிச்ச மாதிரி உட்கார்ந்திருந்தான்.

கடைசியிலே அந்த மாமி ஒரு பாயின்ட் சொன்னாள்.

''இதெல்லாம் முருகனுடைய திட்டம்னு எனக்குத் தோணறது சுப்புஸ்வாமி. நீங்க ஸ்வாமி மலையிலேந்து டில்லிக்குக் குடி பெயர்ந்து வந்ததும், பிள்ளை இன்ஜினியருக்குப் படிச்சதும், என் பேத்தியும் அவனும் சிநேகிதம் ஆனதும் – இதெல்லாம் யாரோ ப்ளான் பண்ணிச் செஞ்ச மாதிரி இல்லே?''

அண்ணா கொஞ்ச நேரம் கண்ணை மூடிண்டு உட்கார்ந்திருந்தான். வாயே திறக்காம உள்ளே எழுந்து சாமி படத்துக்குப் போய் சாஷ்டாங்கமா நமஸ்காரம் பண்ணினான். மகா சாந்தமாய்த் திரும்பி வந்து மாமி கிட்டச் சொன்னான்.

''நீங்க சொல்றா மாதிரி நடக்கறதெல்லாம் ஈச்வர சங்கல்பம் தான். அதிலே குறுக்கே நிக்க நான் யாரு? இடமும், காலமும், குணமும் மாறிப் போயிடுத்து. நாதான் கவனிக்கல்லே. மனப்பொருத்தம் ஏற்பட்டுப் போனதாலே வேறப் பொருத்தம் பார்க்க வேண்டிய அவசியமில்லே. நீங்க மேற்கொண்டு ஆகவேண்டிய காரியம் பாருங்கோ. எனக்கு ஒண்ணே ஒண்ணுதான் முக்கியம். முருகன் சன்னதியிலே வைதிக முறைப்படி கல்யாணம் நடக்கணும். வேற ஒண்ணும் தேவையில்லே..''

தானே அந்த வார்த்தைகளைச் சொன்னாற் போல் விசாலத்தின் முகம் உணர்ச்சி வசப் பட்டிருந்தது.

கார்த்திக்குக்கு மெய்சிலிர்த்துப்போயிற்று. இத்தனை லகுவாக அப்பா இணங்கிப் போனது – நம்ப முடியாத ஆச்சரியமாக இருந்தது. கண்மூடித் தனமான அவருடைய நம்பிக்கை தான் இதற்குக் காரணம் என்று தோன்றிற்று. எந்த அதிர்ச்சியையும் எளிதாக்கும் வைத்தியமாக இருக்க வேண்டும் அது. காரணம் புரியாமல் அவரை நினைத்துப் பரிவு ஏற்பட்டது. எத்தனை எளிமையானவர் அவர்!

அத்தை எழுந்தாள்.

''நான் சன்னதிக்குப் போறேன். வறியா?''

''இல்லே அத்தை. ஆஃபீசுக்கு நாழியாயிடுத்து. நீங்கதான் இருக்கேளே சாமி கிட்ட என்னை ரெப்ரஸெண்ட் செய்ய?''

''நேரடியாப் போடற அப்ளிகேஷனைப் பார்க்கவே நேரமில்லே சாமிக்கு!''

அத்தையின் முகத்தில் சிரிப்பில்லை என் பதைக் கவனிக்க நேரமில்லாமல் லேசாகிப் போன மனசோடு அவன் வீட்டிற்கு விரைந்து உடுப்பை மாற்றிக் கொண்டான். கூடத்தில் மாட்டியிருந்த கையகலக் கண்ணாடியின் முன் நின்று ஏதோ பாட்டை முணு முணுத்தபடி தலையை வாரிக் கொள்கையில் உள்ளுணர்வின் உந்துதலினால் அவன் திரும்பி நிலைப்படியில் நிற்கும் கோமதியைப் பார்த்துத் திடுக்கிட்டுப் பிறகு சமாளித்துக் கொண்டு, ''என்ன மன்னி!'' என்றான்.

கோமதியின் கண்களில் பாமரத்தனமான ஆர்வம் தெரிந்தது.

''பெரிய இடத்துப் பெண் நிச்சயமாயிட்ட குஷியா உங்களுக்கு?... ரொம்ப அழகாமே அவ?''

அவன் தன் கூச்சத்தை மறைத்தபடி ஷூவை அவசரமாக மாட்டிக் கொண்டான்.

''உம். இருப்பா சுமாரா...''

''கல்யாணமானப்புறம் அவாத்துக்குப் போயிடுவேளா நீங்க?''

அவன் சடக்கென்று நிமிர்ந்தான். மார்பு அதிர்ந்து படபடத்தது.

இவளுடைய உளறல் அம்மாவின் செவியில் விழுந்தால் என்ன செய்வது என்று கவலை ஏற்பட்டது.

''ஏன் போகணும்?''

---




பங்களா வாசலிலிருந்த பணியாளரிடம் முல்லா சொன்னார்: 'உனது எஜமானரிடம் கூறு: நஸருதீன் நன்கொடை வசூலிக்கிறான் என்று!' சேவகன் உள்ளே சென்றுவிட்டுத் திரும்பினான். 'எஜமான் வெளியே போயிருக்கிறார்.' ஆனால் ஜன்னல் ஓரத்தில் எஜமான் தலை மறைவதை முல்லாவின் கண்கள் கண்டன. அவர் சொன்னார். 'உங்க முதலாளி பைசா தரா விட்டாலும் பரவாயில்லே. அடுத்த தடவை அவர் வெளியே போகும்போது தனது தலையை ஜன்னலில் வைத்து விட்டுப் போக வேண்டாம் என்று சொல்லு. அப்புறம் யாராவது திருடிக் கொண்டு போய்விடுவார்கள்!'

—மஞ்சுதேவன்

## சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர் பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றும் பரவக் கூடும்.**

தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள கிருமிநாசினி ஆன்டி செப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே, காற்றோட்டமளித்து விரைவாக ஆற்றும் தன்மைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.






**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson

கோமதியின் முகம் இறங்கிற்று. பார்வை எட்டடி சதுர அறையை நோட்டம் விட்டுக் கையகலக் கண்ணாடி மேல் பதிந்து தயங்கிற்று.

''ஒண்ணுமில்லே. ஏதோ தோணித்து.''

புரியாத ஒரு ஆத்திரத்துடன் அவன் கிளம்பினான்.

வெளித் தாழ்வாரத்தில் சுவர் ஆணியில் ஒன்பது கஜ சரப்புடவையை மாட்டிக் கொடியில் உலர்த்துவதற்காக அம்மா சொசுவிக் கொண்டிருந்தாள். நேற்றைய சம்பவத்தைப் பற்றியோ அப்பா எடுத்த முடிவைப் பற்றியோ அம்மா இன்னும் மறைமுகமாகக் கூடத் தன்னிடம் பிரஸ்தாபிக்கவில்லை என்கிற திடீர் உறுத்தலுடன் ''போயிட்டு வரேன்'' என்றபடி அவன் விரைந்தான்.

ஆஃபீசுக்குப் பயணிக்கையிலும், அலுவலகத்து வேலைக்கு நடுவிலும், மத்தியான இடைவேளையிலும் கோமதியின் பார்வையும் பேச்சும் அப்பாவின் வெறும் மௌன நிழலாய் நிற்கும் அம்மாவின் த்ரேதாயுக பாவனையும், மடிக்கொடியும் அசம்பாவிதமாக நினைவில் துருத்தி நின்றன.

''ஏதோ தோணித்து.''

என்ன தோன்றியிருக்கும்? சொகுசாக வளர்ந்த பெரிய இடத்துப் பெண், மாடியிலும் ஆசாரத்திலும் இன்னும் இறுத்துப் போன எட்டடிக் குச்சு வீட்டில் எப்படி இருப்பாள் என்றா? புகைப்படிந்து கொண்டிருக்கும் குளியலறையில் இருபத்தி ஐந்து வாட் அழுமூஞ்சி வெளிச்சத்தில் எப்படிக் குளிப்பாள் என்றா? அவன் பலவந்தமாகத் தன்னை இச்சுழலிலிருந்து விடுவித்துக்கொண்டு 'தாரா சமாளித்துக் கொள்வாள்' என்று சொல்லிக் கொண்டான். குருக்கள் பிள்ளையாகிய நானும், கார்த்திக் என்கிற ஆசாமியும் தனித்தனிப் பிரக்ருதிகள் இல்லை. என்னுடைய பிறப்பும், பழக்கங்களும், வீடும் சுற்றமும், அதன் பலங்களும் பலவீனங்களும், அந்த 'நான்' இல் அடக்கம்.. ஷி பெட்டர் ரியலைஸ் தட்...

இந்த விறைப்பு அன்று மாலை ஆபீஸிலிருந்து நேராகத் தாராவின் வீட்டை அடையும் வரை இருந்தது. தாராவின் அம்மா லலிதா காரில் எங்கோ கிளம்பிக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும் சற்று நிதானித்து, பளீரென்று லிப்ஸ்டிக் சிரிப்பைக் காட்டி,

''வாங்கோ கார்த்திக்!'' என்றாள்.

''ஸாரி நான் அவசரமா ஒரு மீட்டிங்குக்குப் போறேன். தாரா இருக்கா. உள்ளே'' என்றபடி மீண்டும் மிகையாகப் புன்னகைத்து வலது கையால் 'டாட்டா'சைகைக் காட்டிக் காரைக் கிளப்பிய போது, அவனுக்கு ஒரு விநாடி கொடியில் மடி உலர்த்தும் அம்மாவின் உருவம் நிழலாடியது. லேசாக முகம் வியர்த்திருந்தது.

எத்தனை வித்தியாசமான உலகம் இது?

''ஹாய் கார்த்திக்!''

வரவேற்பறையில் நுழைந்து மெத்தென்ற கார்ப்பெட் மேல் காலடி வைத்ததும் தாரா அவனது கைகளைப் பிடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அவளது ஷிஃபான் புடவையும் அவனுக்காகப் போட்டுக்கொண்டிருந்த பர்ஃப்யூமும் அந்த அழகும் நளினமும் அவனைச் சுற்றி நின்ற சொகுசும் —

அன்று காலை கோமதி சொல்லத் தயங்கிய 'ஒண்ணுமில்லே, ஏதோ தோணித்து' என்கிற வார்த்தைகளின் பரிமாணத்தை விசுவரூபமாக்கின.

மை காட், பூ மாதிரி இருக்கும் இவளை நான் அந்த வீட்டில் எப்படி அமர்த்துவேன்? எங்கே உட்காருவோம், எங்கே பேசுவோம், எங்கே...? திருமணம் என்பது எத்தனை பெரிய விஷயம்? எந்தப் பைத்தியக்காரத்தனத்தில் அதைச் சரளம் என்று நினைத்தோம்?

''வி மேட் இட் கார்த்திக்!'' என்று தாரா மோஹனமாகச் சிரித்தாள். ''இனிமே உன்னுடைய 'ஹேலோ'வைப் பத்திப்பக்கத்திலே இருந்து நான் ரிஸர்ச் பண்ணலாம்!''

''ஏமாந்து போகப் போறே தாரா!''

அவன் வெகு இயல்பாக அவளது கரங்களைத் தனது அதரங்களில் பதித்தான்.

''இந்த உன்னுடைய காம்ப்ளெக்ஸ் எப்பப் போகும்?''

வாஸ்தவத்தில் அது தினத்துக்குத் தினம் அதிகமாவதை அவன் உணர்ந்தான். திருமண நாள் குறிக்கப்பட்டுத் தேதி நெருங்க, நெருங்கப் பலவித கவலைகள் அவனை ஆட்கொண்டன. வீட்டுச் சுவர்களின் மங்கலும், குளியலறையின் கருமையும் அவனைச்சேர்ந்தவர்களின் கட்டுப்பெட்டித்தனமும் மிகையாகத் தெரிந்தன.

திருமண நாளை நோக்கி அவனைச் சுற்றிய உலகம் வேகமாக முன்னேறுகையில் ஒருநாள் இரவு சாப்பாட்டு நேரத்தில், பொதுவாக அறிவிப்பது போல் தானாகச் செய்த ஒரு ஏற்பாட்டை இனியும் மறைக்க வேண்டாம் என்று நினைப்புடன் குரலைச் செருமிக் கொண்டு அவன் சொன்னான்.

''கல்யாணம் ஆனப்புறம் நான் தாராவை அழைச்சிண்டு வேற வீட்டிற்குப் போகலாம்னு தீர்மானிச்சிருக்கேன். இங்கே இடம் போறாது. ஆஃபீஸுக்கும் தூரம். ஆபீஸ் பக்கத்திலேயே வீடு ஏற்பாடு பண்ணியிருக்கேன்.''

சொல்லி முடிப்பதற்குள் நெற்றி வியர்த்தது; மார்பு படபடத்தது.

சட்டென்று ஒரு நிசப்தம் கவிந்தது. அதைக் கலைத்துக் கொண்டு கடைசியில் அப்பாவின் வார்த்தைகள் ஒலித்தன.

''ரொம்பப் புத்திசாலித்தனமான ஏற்பாடு. போறதுக்கு முன்னாடி அட்ரெஸ்ஸைக் கொடுத்துட்டுப் போ!''

நிலம் அதிராமல் கைகழுவச் செல்லும் போது விசாலத்தைப் பார்த்துத் தீர்க்கமாகச் சொன்னார்.

''ஒரு சகாப்தம் முடிஞ்சு போச்சு விசாலம். இனிமே ஆரம்பிக்கப் போற சகாப்தம் வேறே!''

காரணம் புரியாமல் திருதிருவென்று ஒரு ஜ்வாலை அவனுள் கிளம்பிற்று.

(தொடரும்)

வாழைப் பழத்தை நசுக்க யானைகளைக் கூப்பிட்டு அனுப்புவார்களோ? அனுப்பு கிறார்கள் 'இமைகள்' படத்தினர்.

ஊருக்கு ஒதுக்குப்புறமான சேரி, பரோப காரி அக்பர் பாட்சாவிடம் ஒரு பெண் அடைக் கலம் என்று ஆரம்பித்து, கள்ளக் கடத்தல், அடிதடி, போலீஸ், ஜெயில், வக்கீல், மாங் கல்யப் பிச்சை என்று கிடைக்கிறதையெல் லாம் போட்டுக் குழப்பி, கடைசியில் 'தொபுகடீர்' என்று திருஷ்டிப் பூசணிக் காயை உடைக்கிற மாதிரி உடைத்திருக் கிறார்கள் — கதையை!

அர்த்தமில்லாத கதைக்கு சிவாஜியின் உழைப்பும், சரிதாவின் நடிப்பும், சரத்பாபு வின் இருப்பும், கடலில் மழை பெய்த கதைதான்.

'அக்பர் பாட்சா...' என்று அடிக் குரலில் நிதானமாய் உச்சரித்துவிட்டு இடது மார் பைத் தட்டும் இடம்...

சரிதா கொஞ்சம் புதுசு என்பதைத் தவிர அவருக்கும் வேலை இல்லை.

'அலை கயிறு' மகேந்திரன் வருகிறபோ தெல்லாம் புன்முறுவலாம். 'அருணை கயிறு' என்று அவரை விளித்துக் கொண்டு பொன் னம்மா, ஸாரி மனோர(ம்)மா வளைய வருகிற சீன்களில் கலகல.

கால் டிரஸ்ஸோடு வழக்கமாய் ஆடுகிற சிலுக்கு காலை மூடின முக்கால் டிரஸ்ஸோடு கடைசிவரை தோன்றி யிருப்பது எதிர் பார்த்துப் போகிறவர்களுக்கு ஏமாற்றம். நிவர்த்தி செய்ய மனோரமாவின் பெண்ணாய் மலையாள டிரஸ்ஸில்(!) ஜெயமாலினி.

தெலுங்கு முகத்தோடு வில்லன் சுதர்ஸன். வில்லன் வில்லன் என்று அழுத்திச் சொல்ல வேண்டி யிருக்கிறது. கூடவே கோபால கிருஷ்ணன். ஐயோ பாவம்.

அது சரி, தங்க பிஸ்கட்டுடன் சிவாஜி தான் ஒளிய வேண்டும். கூடவே அடித்துப்




'சாலா' என்று சீறிப் பாய்ந்து வம்பு பண்ணுகிறவர்களைத் துவம்சம் பண்ணுகிற இடம்....

வாயில் வார்த்தை வராமல் தத்தளித்து, கண்ணில் நீர் பெருக, 'இருந்தா சேர்ந்து சாப்புடுவோம் — இல்லாட்டி சாப்புடாம இருப்போம்' என்று நாத் தழுதழுக்கிற இடம்....

'அப்பாடி, சிவாஜிதான்!' என்று ஆறுதல் தூவுபவை. மீதி இடங்களில் சிவாஜியைக் காணோம், வெறும் 'கணேசன்'தான்!

சரிதாவுக்கு சிவாஜியுடன் நடிப்புப் போட்டி, மன்னிக்கவும், நடிப்புப் போட்டி. 'வா சொன்னே' என்று அடிக்கொரு தரம் சொல்லி, வாயில் சிவக்காத வெற்றிலையை மென்றுகொண்டே ப்ளாக் டிக்கட் விற்கிற

பிடித்துக் கொண்டு சரிதா ஏன் ஒளிய வேண்டும்? அழுகிற குழந்தையைச் சமா தானப்படுத்துகிற சாக்கில் அதைக் கொன்று கதையில் என்னத்தைச் சாதித்து விட்டாராம் டைரக்டர்? செண்டிமெண்டல் டச்சோ? அபத்தம். முடிவு அதைவிட அபத்தம்.

'மாடப் - புறாவோ இல்லை மஞ்சள் நிலாவோ' என்கிற பாட்டு மாத்திரம் காதில் இன்னும் ரீங்கரித்துக் கொண்டிருக்கிறது. கங்கை அமரன், மலேசியா வாசுதேவன் உழைப்பு. சிவாஜிக்காக வேண்டிக் கூடியவரை டி. எம். எஸ். மாதிரி மலேசியா வாசுதேவன் குரலை மாற்றிக் கொண்டிருப்பது வீண் போகவில்லை.

பாவமன்னிப்பு ரஹீம் எங்கே, இமைகள் அக்பர் பாட்சா எங்கே? ஹூம்!

''இதுக்குத்தான் நான் உங்க கூட சினிமாவுக்கு வரமாட்டேங்கறது.''

''ஏனும்....''

''பின்ன... படத்தை எங்கே பார்த்தீங்க? எப்பப்பார்த்தாலும் மறுபடியும் மறுபடியும் என்னேயே பார்த்துக்கிட்டு... அங்கயாவது இருட்டு... வெளியில வந்துட்டோம்.... எல்லாரும் பாக்கறுங்க. கையை விடுங்க.''

''நானு படம் பார்க்கலே... நீதான அப்பப்ப தொட்டுத் திருப்பினே?''



# பகவதிபுரம் ரயில்வே கேட்

''ஆமா... சிலுக்கு வந்தவுடனே ஆன்னு வாயைப் பொளந்துக்கிட்டு உக்காந்துட்டீங்க... உங்களே மாதிரி ஆளுங்களுக்காகத் தான கனவு சீன் அது இதுன்னு அர்த்தமில்லாம அந்த ஆபாச டான்ஸைச் சேர்த்திருக்காங்க...?''

''அந்த மாதிரி மட்டும் சொல்லாதே. நீ எந்தக் கேள்வி வேணுக் கேளு. நான் டக்டக்னு பதில் சொல்றேனு இல்லையா பாரு.''

''நீங்க எப்ப உருப்படப் போறீங்க?''

''படத்தைப் பத்திக் கேளுன்னு சொன்னேன்.''

''ஆரம்பத்திலே கார்த்திக், ராஜலட்சுமி மோதற இடம்லாம் எப்படி?''

''அந்தப் பத்து ரூபாயை ராஜலட்சுமி இட்ட கார்த்திக் மடக்கித் திருப்பி வாங்கறதைச் சொல்றியா?''

''தெரியுமே... பொம்பளே குளிக்கிற சீனேத்தான் ஒழுங்காப் பார்த்திருப்பீங்க... ஒரு விஷயம் எனக்குப் புரியலீங்க... ராஜலட்சுமி அக்கா புருஷனேத் திமிர்னு ஏன் கட்டிக்குது?''

''அந்த ஒரு விஷயம்தானு ஒனக்குப் புரியலே?''

''உங்களுக்குத் தெரிஞ்சாச் சொல்லுங்க.''

''புருஷன் தன்னுடை பூ வியாபாரத்தைக் காப்பாத்தினுன்கிறதுக்காக அக்காவே மூனேஞ்சு நடத்தினதா முன்னுல காட்டிட்டு கடைசியில திமிர்னு இன்னெரு புருடா... தியாகராஜன் தேசிங்காம்... ஊர்ல இருக்கற 'குதிரை'ங்களே யெல்லாம் அடக்கிடுவாராம். என்னென்னவோ ஐடியாவில சீனே எடுத்து வைச்சுக்கிட்டுக் கிடைக்கிற இடத்திலேயெல்லாம் ரொப்பி யிருக்கார் டைரக்டர்.''

''நெறைய சீனுங்க எடுக்காமலே விட்டுப் போன மாதிரி கதைல அங்கங்கே 'பச்சைக் குதிரை' தாண்டியிருக்காங்க.''

''கதை இருக்குங்கற?''

''வித்தியாசமான காரெக்டருங்கன்னு குடிகார பஸ் டிரைவர், வாழாவெட்டி வடிவு, தேசிங்கு பூதலிங்கம்னு ஆரம்பிச்சுட்டு பின்னுல ஒரேயடியாக் குழப்பிக்கிட்டு பொம்மையைக் கீழே போட்டு உடைச்சிட்டு முழிக்கிற குழந்தை மாதிரி விடுவிடுன்னு மூணு பேரைக் குளோஸ் பண்ணியும் திருப்தி யில்லாம முழிக்கிறுரு டைரக்டர்.''

''எத்தனை ஜன்மம் எடுத்தாலும் நாம ஒண்ணுயிருக்கணும்னு கார்த்திக் சாகறச்சே சொல்றப்ப...''

''அடாடா! உடல் சிலிர்ப்பைத் தாங்க முடியாம தவிச்சிருப்பீங்களே!''

''ஆறு பாட்டுங்கறது கொஞ்சம் ஜாஸ்தி யில்ல...?''

''நீங்க வேற... ஏதோ அப்பப்ப நல்ல நல்ல பாட்டா வருதோ பொழைச்சேனே... இளையராஜா — சும்மா சொல்லக் கூடாது. நல்லாவே பண்ணி யிருக்காரு... இதுகூட இல்லாமல் போயிருந்தா வெளிய வந்ததும் நேரே பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டியதுதான்.''

''விநாயகருக்காகப் பாடுகிற பாட்டை சிலுக்குவின் 'அய்யய்ய' நடனத்தால் குளிப்பாட்டி ஒரு புதுமை செய்திருக்கிறுர் பார்த்தியா டைரக்டர்?''

''மணியன்ட்ட சொல்லுங்க, இன்னெரு முறை ஆத்திக அன்பர்களுக்காகப் பொங்கி எழுவாரு!''



-ஜெய மன்மதன்

# விரும்பி வரவேற்

வேண்டாத விருந்தாளி
நேர்மாறாக யார் உங்கள் இல்
ஆர்வமுடன் எதிர்ப

**சுஹாசினி:-** ஒரு நாள் படப்பிடிப்பின் இடையில் ஒரு நண்பர் வேர்க்கடலைப் பொட்டலம் ஒன்றை மனோரமாவிடம் கொடுத்துச் சென்றார். அதைத் தாமும் கொரித்ததுடன் வருபவர்களுக்கெல்லாம் பங்கு அளித்துக் கொண்டிருந்தார். அப்போது அங்கு ஸ்டைலாக வந்த ஒரு அஸிஸ்டெண்டிடம் நீட்ட அவர் கர்வமாக, ''இதை முட்டாளுங்கதான் திம்பாங்க'' என்றார். மனோரமா 'பளிச்' சென்று ''அதனால் தான் உங்களிடம் தந்தேன்'' என்று கூற எல்லாரும் குபீரென்று சிரிக்க அந்த அஸிஸ்டெண்டுக்கு எப்படியோ ஆகி விட்டது. இப்படி நறுக்குத்தெறித்தாற் போல் பேசும் மனோரமா ஆச்சி என் வீட்டுக்கு வரவேண்டும்; பல நாள் தங்கவேண்டும்; என்னைச் சிரிக்க வைத்துக்கொண்டே இருக்க வேண்டும்!





**மாதவி:-** 'அந்தா கானூன்' படத்தில் நான் அமிதாப்புடன் நடிக்கிறேன். இந்தியாவின் நெ. 1 நடிகராயிற்றே. ஒதுங்கியே இருந்தேன். ஆனால் அவரே வலிய வந்து பேசினார். ''ஸார்''! என்று ஆரம்பித்தேன். ''என் பெயர் அமிதாப்'' என்றார். ''அமிதாப்-ஜீ'' என்றேன். ''அமித்'' என்று தான் நண்பர்கள் அழைப்பார்கள்'' என்றார் புன்னகையுடன். இறுக்கச் சூழ்நிலை அப்படியே கலகலப்பாக மாறிவிட்டது. தெலுங்கு பத்திரிகையில் அவரைப் பற்றி வந்திருந்ததை மொழி பெயர்த்துக் கூறச் சொன்னார். அவரை என் வீட்டுக்கு அழைத்திருக்கிறேன். வருவதாக ஒப்புக் கொண்டிருக்கிறார். அந்த நாளை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

**கார்த்திக்:-** சென்னையில் ஃபெடரேஷன் கோப்பை ஃபைனல்ஸ் ஆட்டம். சில பார்வையாளர்கள் கத்திக் கூச்சலிட்டு ஆர்ப்பாட்டம் செய்யப் போக, அப்பா ஆட்டத்தின் மீதுள்ள பற்றுதலால் அவர்களிடையே புகுந்து அமைதி காத்தார். ஆட்டம் முடிந்ததும் வெற்றி பெற்றவரை மட்டுமின்றித் தோல்வியுற்றவரையும் வாழ்த்தினார். அவருக்கு ரொம்ப ஆசை உலகப் புகழ் பீலி தம் வீட்டுக்கு வர வேண்டும் என்று. அவர் காலத்தில் நடக்கவில்லை. என் காலத்திலாவது...? ஏங்குகிறேன்.



...பவம் எல்லோருக்கும் உண்டு. இதற்கு
...துக்கு விஜயம் செய்ய வேண்டும் என்று மிக
...கிறீர்கள் என்று கேட்டபோது....

# ...க ஒரு விருந்தாளர்!

**சாந்திகிருஷ்ணா:-** நான் பள்ளிச் சிறுமியாக இருந்தபோது வைஜயந்திமாலா நடனம் பார்த்தேன். நான் நாட்டியம் பயிலப் பல காரணங்களுள் அன்றைய நிகழ்ச்சி முக்கியமானதாய் அமைந்தது. பாவத்துக்கும் முத்திரைகளுக்கும் வைஜயந்தி மாலாவுக்கு ஈடு இணை வேறு யாரும் கிடையாது என்பது என் கருத்து. நாட்டியத்தில் ஆரம்பித்து நடிகையானுர் அவர். நானும் அப்படித் தான். அவர் ஒரு நாள் என் வீட்டுக்கு வந்து என்னைப் பெருமைப்படுத்தவேண்டும். அவரிடம் நடனம் பற்றி மணிக்கணக்காகப் பேசவேண்டும்.





**அம்பிகா:-** ஒரே துறையில் இரு பெண்கள் இருந்தால் போட்டியும் பொறுமையும் தான் அதிகமாகும் என்பார்கள். ஆனால் ஸ்ரீதேவி வெள்ளை உள்ளம் படைத்தவர். ஒருநாள் வெளிப்புறப் படப்பிடிப்பின்போது அந்தப் பக்கம் வந்த ஐஸ்கிரீம் வண்டி அவர் கண்ணில் பட்டு விட்டது. ''அம்பி! ஐஸ்கிரீம் சாப்பிடலாமா?'' என்று சேட்டு வாங்கி சப்புக் கொட்டி சுவைக்கத்தொடங்கி விட்டார். சுற்றி இருந்தவர்கள் என்ன நினைப்பார்கள் என்று தயங்கவே செய்யாத அந்தக் குழந்தை உள்ளம் என்னைத் தன் வீட்டுக்கு வருமாறு அழைத்திருக்கிறது. நாள் முழுவதும் விளையாட வேண்டுமாம், வீடியோ பார்க்க வேண்டுமாம்! சந்தர்ப்பம் எதிர்நோக்கியிருக்கிறேன்.



**மோகன்:-** ஒருநாள் ஹோட்டலில் லிஃப்டில் கீழே வந்து கொண்டிருந்தேன். அடுத்த மாடியில் லிஃப்ட் நின்ற போது ஒரு வயதான தம்பதி லிஃப்டில் நுழைந்தனர். சில விநாடிகளில் அறிமுகம் முடிந்து, குசலம் விசாரித்து, நண்பர்களாகி விட்டோம்! விமானப் பயணத்தில், ரயில் பயணத்தில் சந்திப்பவர்களையெல்லாம் கூட மறந்து விடுவோம். ஆனால் இந்த லிஃப்ட் பயணத்தில் ஏற்பட்ட ஒரு நிமிஷத்துக்கும் குறைவான நேரச் சந்திப்பு ஒரு ஆழமான நட்பாக வளர்ந்து விட்டது என்றால் ஆச்சரியமாக இல்லை? எனக்குச் சென்னையில் இன்று ஒரு இல்லம் இருக்கிறதென்றால் அது வாதிராஜ் தம்பதியின் வீடுதான்! அங்கேதான் நான் அடிக்கடி போக விரும்புகிறேன்.

—சலன்

# டைளி கெடியாரம்

கருணை மணாளன்

தெள்ளிய நீருக்குள்ளிருந்து உயிர் பெற்று வரும் முத்துக்களைப் போல நீர்க் குமிழ்கள் பஞ்சரான டியூப் வழியே சர்ரென்று வருவதைக் கண்டுவிட்டு, குச்சி ஒன்றைத் துவாரத்தில் அடையாளத்துக்காகச் செருகிவிட்டு வேறுபஞ்சர் இருக்கிறதா என்று ஷேக் ஜபருத் டியூபைத் தண்ணீரில் அமுக்கியபோது, ஷேக் ஜபருத்தின் மைந்தன், ராஜா ரபி மூச்சிரைக்க ஓடோடி வந்து, ''வாப்பா, மாமி வந்திருக்காங்க. நீங்க அவசரமா வரணுமாம்'' என்று சற்று ஆசுவாசப் பெருமூச்சு விட்டான்.

''மாமியா...? எந்த மாமிடா?''

''ஷாகிர்தா மாமி...''

''மாமா வரலியா?''

''இல்லே, மாமி மட்டும்தான் வந்திருக்காங்க...''

''சரி, அதோ, அந்தச்சைக்கிள்ளே ரெண்டு ஃபோக்ஸ் போயிருக்கு, கழற்றி நிக்கல் ஃபோக்ஸ் போடு. பேக் வீலிலே கோட்டம் கிடக்கு. அதையும் சரிபண்ணிடு. நான் போய்ப் பார்த்துட்டு வந்துர்றேன்! புதுஸா யாரும் சைக்கிள் கேட்டா வாடகைக்குக் குடுத்துடாதே. வாப்பா இல்லேன்னு சொல்லிப்பிடு!''

ஷாகிர்தா இப்போது எதற்காக வந்திருக்கிறள்? ஷேக் ஜபருத்தின் தந்தை ஷவ்கத் கமால் காலமாகும்போது ஷாகிர்தாவுக்குப் பதினோரு வயசு.

உரிய வயதில் தங்கையைக் கல்யாணம் செய்து வை என்று மூவாயிரம் ரூபாயை ஷேக் ஜபருத்திடம் ஷவ்கத் கமால் நல்ல திடமாய் இருக்கும்போது ஒப்படைத்திருந்தார்.

சின்னஞ் சிறிய கண்ணாடிக் கூண்டுக்குள் கடியார ரிப்பேர் மட்டும் செய்து வந்த ஷேக் ஜபருத், தந்தை தங்கையின் கல்யாண வகைக்குத் தந்த மூவாயிரம் ரூபாயை வைத்துப் பக்கத்தில் ஏழுசைக்கிள்கள் வாங்கி 'வாடகைக்கு விடப்படும்' போர்டு மாட்டிச் சைக்கிள் கடையைத் துவங்கினன். உதவிக்கு, பள்ளிப் படிப்பு ஏறாத புதல்வன் ராஜா ரபியைத் தன்னேடு சைக்கிள் கடையைக் கவனிக்க வைத்துக் கொண்டான்.

வாடகைக்கு எடுத்துச் சென்ற சைக்கிள்களில் இரண்டு திருட்டுப் போனபோதுதான் ஷேக் ஜபருத் யோசனை செய்தான், அந்தப் பணத்தை வங்கியில் போட்டு வைத்தோமில்லையே என்று.

இரவி புதூர் கடையிலிருந்தும், லாயத்திலிருந்தும், குளச்சலிலிருந்தும் வரன்கள் பேசி வந்த போது. நீர அலசி, பெரியவர்களுடன் கலந்து இட்டச்சேரி ஹிதாயத்துல்லாவை ஷாகிர்தாவுக்குப் பேசி முடிவெடுத்த மறு வாரமே கல்யாண நாள் நிச்சயிக்கப் பட்டு விட்டது.

சிவில் சப்ளைஸ் கார்ப்பரேஷனில் குடோன் வாட்ச்மேன் உத்தியோகம் ஹிதாயதுல்லாவுக்கு. பிக்கல் பிடுங்கல் இல்லாத குடும்பம். வயதான அம்மாமட்டுமே ஹிதாயதுல்லாவிற்கு இருந்தார்கள்.

கூட்டிப் பெருக்கிக் கழித்துப் பார்த்தான் ஷேக் ஜபருத். எப்படியும் பதின்மூன்றுயிரம் ரூபாய் இல்லாமல் இந்தக் கல்யாணத்தை நடத்த முடியாது. அங்கே இங்கே கொஞ்சம் புரட்டி, மனைவி அலிமாவின் நகைகளை பாங்கில வைத்து ஒரு வழியாய் ஷாகிர்தாவை ஹிதாயதுல்லாவிடம் ஒப்படைத்தான்.

ஹிதாயதுல்லாவிற்குப் பேசிய பிரகாரம் சிங்கப்பூர் கடிகாரம் ஒன்றைத் தவிர மீதி அனைத்தும் கொடுத்து விட்டான். வருகிற ஹஜ்ஜுப் பெருநாளைக்குள் தருவதாக வாக்களித்தான் ஹிதாயதுல்லாவிடம்.

ஹிதாயதுல்லாவும் ஒப்புக்கொண்டான்.

வரிசையாக மூன்று ஹஜ்ஜு பெருநாட்கள் சென்று விட்டன.

சிங்கப்பூர் கைக்கடியாரம் பேசிய பிரகாரம் ஷேக் ஜபருத்தால் கொடுக்க முடியவில்லை. வாங்கிய கடன்களுக்கு வட்டி, பெருகி வரும் குடும்பச் செலவு, குறைவான வருமானம். திக்குமுக்காடிக் கொண்டிருந்தான் ஷேக் ஜபருத்.

சைக்கிளில் இடலாக்குடிக்கு விரைந்தான்.

ஷாகிர்தாவின் முகம் வாடிப் போயிருந்தது.

கைக்கடியாரம் தருவதாக வாக்களித்து இத்தனை நாட்களும் தராதது ஹிதாயதுல்லாவிற்குப் பெருத்த வருத்தத்தைத் தந்தது. சோதனையாக ஹிதாயதுல்லாவின் பழைய கைக்கடியாரம் ஒன்றை நண்பன் ஒருவனுக்கு இரவல் கொடுத்த இடத்தில் தொலைந்து விட்டது. நேரம் பார்க்கக் கடிகாரம் இல்லாததால் வேலைக்குத் தாமதமாகப் போக நேர்ந்த தன் விளைவாக மேலதிகாரியின் வெறுப்பையும், கோபத்தையும் பெற நேர்ந்தது. இதனாலெல்லாம் மனசு சோர்ந்த ஹிதாயத்துல்லா, ''உங்கண்ணன் என்னிக்குக் கெடியாரம் தருகிறரோ அன்னிக்கு நீ வந்தால் போதும். கடியாரம் வாங்கிறதுக்குன்னு உன்னோட நகை நட்டில கைவச்சா, நான் உன் தாலியிலேயே கை வைக்க வேண்டி வரும், புரிஞ்சுதா?'' —இரும்பு இதயம் கொண்டவன் போல் நிர்த்தாட்சண்யமாக ஜாகிர்தாவைத் தாய் வீட்டுக்கு அனுப்பி விட்டான்.

அழுதுகொண்டே ஷாகிர்தா கூறினுள்.

''அழாதே, ஷாகிர்தா. என்ன செய்யறது... சோதனை மேல் சோதனையாக நமக்குப் பல சரிவுகள் ஏற்பட்டு விட்டதால், நாம் சொன்ன பிரகாரம் நடந்து கொள்ள முடியவில்லே. இன்ஷா அல்லா, சீக்கிரமே ஏற்பாடு பண்றேன்....''

மதிய உணவு அருந்தி விட்டுக் கடைக்கு விரைந்தான் ஷேக் ஜபருத்.

டைம்பீஸ் ஒன்றை ரிப்பேர் பார்ப்பதற்காக ஒருவர் காத்திருந்தார். கழற்றிப் பார்த்தான். ஒரு பக்கத்து வீல் ஒடிந்திருந்தது.

''பதினஞ்சு ரூபா ஆகும். சுத்தமா பழுது பார்க்கணும். ஒரு வாரம் கழிச்சு வாங்க...''

வந்தவர் அடையாளக் கார்டு வாங்கி விட்டுப் புறப்பட்டார்.

டிராயர் உள்ளே கையை விட்டவன் சில நொடிகள் சிந்தனை வசப்பட்டவனுக, கையில் தட்டுப்பட்ட பொட்டலம் ஒன்றினை எடுத்தான்.

கடந்த மாதம் ரிப்பேருக்காக வந்த சிட்டிஸன் ஆட்டோமாட்டிக் கெடியாரம், புத்தம் புதியது. கை நழுவி பஸ்ஸிலிருந்து கீழே விழுந்ததில் மெயின் ஸ்பிரிங் போய்விட்டது. நாகர்கோவில் வந்திருந்த பிரயாணி ஷேக் ஜபருத்தின் திறமையைக் கேள்விப்பட்டுக் கடியாரத்தை அவனிடம் தந்திருந்தார், பழுது பார்ப்பதற்காக.

''கன்னியாகுமரி போய் விட்டுவரும்போது வாங்கிக் கொள்கிறேன். அதுக்குள்ளே நல்லாப் பார்த்து வச்சிருங்க'' என்று சொல்லிச் சென்றவர் இரண்டு மாதங்களாகியும் வரவே இல்லே.

இந்தக் கடியாரத்தையே ஹமீதாயத்துல்லாவிடம் கொடுத்து விட்டால்....?

நீண்ட நாள் பிரச்னை தீர்ந்து விடும். தங்கையின் வாழ்க்கையில் மீண்டும் வசந்தம் தோன்றும்.



மறுபடியும் அந்தப் பிரயாணி வந்து விட்டால்...? பழுது பார்த்த கடியாரத்தைக் கேட்டு வைத்தால்...? அப்புறம் ஹிதாயத்துல்லாவுக்கு விஷயம் எட்டுமானால்... சே! திருட்டுப் பொருளையா உன் தமையன் தந்து என் மானத்தை வாங்கினன் என்று தங்கையையே விவாகரத்து செய்து விடும் அளவு விஷயம் விபரீதமாக அல்லவா போய்விடும்!

அந்தக் கடிகாரத்தை மறுபடியும் பத்திரமாக 'பாக்' பண்ணி டிராயருக்கு உள்ளே வைத்தான்.

**ம**று மாதம்.

சைக்கிள் ஒன்றுக்குப் புதிய டயர், டியூப் மாட்டிக் கொண்டிருந்தான் ஷேக் ஜபருத். இன்றைக்கு எப்படியாவது நாற்பது ரூபாய் திரட்டியாக வேண்டும் என்று அவனது உள்ளம் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தது.

சில தினங்களாக ஷாகிர்தா இருமிக் கொண்டிருந்தாள். இரவிலே அவளால் உறங்க முடியவில்லை. டாக்டரிடம் அழைத்துச் சென்றதில் இரத்தப் பரிசோதனை, சளி சோதனை, எக்ஸ்ரே முதலானது எடுத்துப் பார்க்க வேண்டும். இது டி.பி.யின் அறிகுறி மாதிரி தெரிகிறது. ஆரம்பத்திலேயே சிகிச்சை அளித்தால் குணமாக்கி விடலாம் என்று சொன்னார்.

முந்திய தினக் கலெக்‌ஷனில் செலவு போக இருபது ரூபாய் வரை இருந்தது. அத்துடன் நாற்பது ரூபாய் இருந்தால் தங்கையைக் கவனித்துக் கொள்ளலாம் என்று தனக்குள் திட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

அப்போது பரபரப்புடன் ஒருவர் வந்து, ''தம்பி, ஒரு சின்ன உதவி செய்வியா?'' என்று தயவாய்க் கேட்டார். ''ஒன்றுமில்லே. இந்தப் பார்சலைக் கொஞ்சம் வச்சுக்கோ. அப்புறமா வந்து வாங்கிக்கிறேன்'' தொடர்ந்து சொன்னவர் ஷேக் ஜபருத்தின் பதிலை எதிர்பாராமல் அவனிடம் திணித்துவிட்டு, அந்த வழியே வந்த ஆட்டோவில் ஏறி விரைந்து விட்டார்.

மதுரையில் நடந்த நாடகம் ஒன்றுக்கு வந்திருந்த நடிகர் நாகேஷிடம் ஒரு ரசிகர் ''மனிதருக்கு வால் இருந்தால் எப்படி இருக்கும்?'' என்று கேட்டார். அதற்கு நாகேஷ் ''புது மாப்பிள்ளையின் வாலுக்கும் சேர்செய்து கொண்டே போக வேண்டியதிருக்கும்'' என்றாரே பார்க்கலாம்!

—இசைமுத்து



மறுபடியும் அவனது சிந்தனை — கவலை, துயரம் பூராவும் தங்கை ஷாகிர்தாவைச் சுற்றியே வட்டமிட்டது.

பக்கத்துக் கடைக்காரரிடம் கைமாற்றலாக நாற்பது ரூபாய் வாங்கிக் கொண்டு கடையைப்பூட்டிவிட்டு வீட்டுக்குச்சென்றான். ஷாகிர்தாவுக்குத் தீவிர சிகிச்சை தேவைப்பட்டது.

**இ**ரண்டு வாரங்களுக்குப் பிறகு.

கடையில் வேலையாக இருந்த ஷேக் ஜபருத்தை ஒருவர் கூப்பிட்டார்.

நிமிர்ந்தான்.

''என்னைத் தெரியுதா தம்பி?''

ஓ...பார்சல் தந்துவிட்டுச் சென்றவர்.

''என்ன அப்படி அவசரமா அன்றைக்கு ஓடிட்டீங்க?''

''காரணமாகத்தான்.... அந்தப் பார்சல் பத்திரமா இருக்கா?''

''இதோ!''

நன்றிப் பெருக்கோடு வாங்கியபடி கடைக்குள் சென்று பிரித்தார்.

ஆர்வத்தோடு ஷேக் ஜபருத் அந்தப் பார்சலைப் பார்வையிட்டான்.

அத்தனையும் புத்தம் புதிய கைக்கெடியாரங்கள். சீல்கள் பிரிக்கப்படாமல் இருந்தன.

''தம்பி... இருபத்தையாயிரம் ரூபா பெறுமானமுள்ள இந்தக் கடியாரங்கள் பறிமுதல் ஆக இருந்தது. தக்க நீ காப்பாற்றிக் கொடுத்தே...! இந்தா இதை என்னோட அன்பளிப்பா வச்சுக்கோ!''

ஷேக் ஜபருத் மலைத்தான்.

''உன்னோட நம்பிக்கை விசுவாசத்தை மெச்சுறேன்ப்பா... மற்றவங்களா இருந்தா இதை அப்படியே அபேஸ் பண்ணியிருப்பாங்க.... நான் வரட்டுமா?'' ப்ரீஃப் கேஸுக்குள் அவைகளை அடக்கியபடி டாக்ஸியில் புறப்பட்டு விட்டார்.

ஹிதாயத்துல்லாவுக்கு அளிப்பதாக வாக்குறுதி தந்த கடியாரம். ஸிட்டிஸன் டே அன்ட் டேட் ஆட்டோமாட்டிக்! மகிழ்ச்சி முகிழ்க்கப் பரபரப்போடு கடையை மூடிவிட்டு சைக்கிளை எடுத்துக் கொண்டு ஷேக் ஜபருத் வீட்டுக்கு விரைந்தான்.

எதிரே போலீஸ் ஜீப் ஒன்று வந்தது. உள்ளே நோக்கிய ஷேக் ஜபருத் அதிர்ச்சி வசப்பட்டான். சற்று முன்பு கைக்கடியாரங்களைப் ப்ரீஃப் கேஸுக்குள் வைத்து டாக்ஸியில் சென்றவர் போலீஸ்காரர்கள் நடுவே சோக சித்திரமாய் வீற்றிருந்தார்.

ஷாகிர்தா! உன் வாழ்விலேயே மறுபடியும் ஒரு மலர்ச்சி ஏற்பட ஆண்டவன் நாடிவிட்டான்! எந்தக் காரணத்துக்காக இத்தனை நாளும் உன்னை வாழாவெட்டியாக உன் கணவன் வைத்திருந்தானோ, அந்தக் காரணத்தை உடைத்தெறிய இதோ கைக்கெடியாரம் கிடைத்து விட்டது! இனிமேலாவது நீ மகிழ்ச்சியாக வாழ்வாயாக!'' நெஞ்சம் மகிழ விரைந்தான்.

ஆனால்... ஷாகிர்தா அதற்குள் கண்ணை மூடிய உண்மை இனிமேல்தான் அவனுக்குத் தெரியப் போகிறது!

# டெட் கட்டியில் மட்டுமே உள்ளது ஸால்வெண்ட் பவர்

## இது துணிகளுக்கு முற்றிலும் பளிச்சிடும் வெண்மை அளிக்கிறது

புதிய
ஸொல்வெண்ட்
பவர்

det
NEW SOLVENT POWER
det
detergent washing cake

வேறெந்த டிடர்ஜெண்ட் கட்டியும் பாரும் இதற்கு இணையில்லை பாரும்

# பிற்பகல் விளைவுகள்

வேகமாக வந்து கொண்டிருந்த காருக்குமுன்னுலே வந்து விழுந்தான்ஒருவன்.

தற்கொலே முயற்சி.

ஆனுல் அவன் தலேயெழுத்து டிரைவர் பிரேக்கை அழுத்த எந்த அடியும் இல்லாமல் தப்பிவிட்டான்.

அதிர்ச்சியில மயங்கிவிழுந்துவிட்ட அவனேக் காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு வந்தான் சதீஷ்.

தற்கொலேக்கு முயன்றவனே முதலில் அறிமுகப்படுத்த வேண்டும்.

அவன் பெயர் நாகராஜ். வயது நாற்பத்தெட்டு. மாநிறத்திலும் சேர்த்தியில்லாமல் அட்டைக் கறுப்பிலும் சேர்த்தி யில்லாமல் ஒரு நிறம். ஒரு மனேவி ரம்யா. ஆறு குழந்தைகள் 3 + 3.

கண்டதைச் சாப்பிட்டுக் கண்டவர்களோடு உறவு கொண்டதால் அவனுக்கு இப்போதைக்கு மூன்றே மூன்று வியாதிகள். வயிற்று வலி, இன்பசுக நோய், புற்று நோய். வலி தாங்க முடியாமல் தற்கொலே செய்துகொள்வதற்காக காரின் குறுக்கே பாய்ந்திருக்கிறுன்.

இவை யாவும் — மயக்கம் தெளிந்தவுடன் அவன் கொடுத்த வாக்குமூலங்கள்.

''நீ தற்கொலே செய்து கொண்டால், உன்னே நம்பியிருக்கும் குடும்பம் நடுத்தெருவில் நிக்காதா?'' — சதீஷ் கேட்டான்.

''இப்போது மட்டும் எங்கே நிற்கிறதாம்? நடு ரோட்டில்தான்!''

''நீ இறந்துவிட்டால் அவர்களுக்கு யார் சம்பாதித்துப் போடுவார்கள்?''

''இப்போது கூட, நான் சம்பாதித்து அவர்களுக்குப் போடுவதில்லே. அவரவர்கள் அவரவர்களுடைய வயிற்றைக் கழுவிக் கொண்டிருக்கிருர்கள். உள்ளதைச் சொன்னுல் — நான் உயிரோடு இருப்பதுதான் அவர்களுக்குப் பாரம். நான் தற்கொலே செய்துகொள்ளத்தான் போகிறேன்!''

''செய்துகொள். ஆனுல் வெறுமனே தற்கொலே செய்து கொள்ளாமல், எனக்காக ஒரு கொலேயைச் செய்து விட்டுத் தற்கொலே செய்துகொள்!''

''என்ன கொலே செய்ய வேண்டுமா?''— வியப்பில் வாயைத் திறந்தவன்மூடவேயில்லே.

''ஆமாம். சாவதுதான் சாகப் போகிறுய். எனக்காக ஒரு கொலேயைச் செய்து விட்டுச் செத்துப்போ. இதற்காக நான் உனக்குப் பத்தாயிரம் ரூபாய் தருகிறேன். இதை நீ உன் மனேவியிடம் கொடுத்துவிட்டுக் கொலேயைச் செய். அப்புறம் உன் இஷ்டம் போலத் தற்கொலேயும் செய்துகொள். என்ன சொல்கிறுய்?''

பத்தாயிரம் ரூபாய் அவனேச் சம்மதம் தெரிவிக்கச் சொன்னது. — தெரிவித்தான்.

''யாரைக் கொலே செய்ய வேண்டும்? எதுக்காக?'' — இரண்டு கேள்விகளே ஆணித்தரமாக வைத்தான்.

''என் பேரு சதீஷ். கேள்விப் பட்டிருக்கியா?''

''ம்ஹூம்.''

'' 'மண மேடையில் ஒரு பிண நாடகம்' பாட்டுக் கேள்விப்பட்டிருக்கியா?''

''ஓ! கேட்டிருக்கேனே! எனக்கு ரொம்பப் பிடிச்ச பாட்டு... அதை ரவிகுமார்தானே பாடியிருக்கார்!''

''நோ, நோ. நான் பாடினது அது!''

''என்னங்க இது! இந்தப் பாட்டுக்காகத் தானே ரவிகுமாருக்கு ஜனுதிபதி விருதுகூடக் கெடைச்சதுன்னு பேப்பர்ல பார்த்தேனே!''

''பரிசு வாங்கினது அவர்தான். ஆனுல் பாடினது நான்!''

''என்னங்க இது அநியாயமா இருக்கு! ஒருத்தர் பாடினதுக்கு இன்னெருத்தர் எப்படிப் பரிசு வாங்க முடியும்?''

''இதே கேள்வியைத்தான் நான் இசை அமைப்பாளருக்கிட்டே கேட்டேன். 'இளமை ராத்திரிகள்' படத்துக்காக ரவிகுமார் பாட வேண்டிய அன்னிக்கு அவன் வரலே. தொண்டையிலே ஆபரேஷன் அவனுக்கு. படத்தைச் சொன்ன தேதிக்கு ரிலீஸ் பண்ணணும் கிறதுக்காக — அவனேப் போல அதே குரல்ல அடிக்கடிமேடைகள்ல பாடினஎன்னேப் பாடச் சொன்னுங்க. பாடினேன். ஆனுல் பெரிய பாடகர் பாடினதாச் சொன்னு படத்துக்கு ரேட் கூடும்னு ரவிகுமார் பாடினதாவே விளம்பரம் பண்ணிட்டாங்க!''

''அப்படியா?''

''ஆமா. இது இசையமைப்பாளருக்கும் டைரக்டருக்கும் நல்லாத் தெரியும். அந்தப் பாட்டு ஹிட் ஆயிடுச்சு. நான்தான் பாடினேன்னு சொல்லுங்கன்னு அவங்க கால்ல விழுந்து கெஞ்சினேன். பாட்டேனுட்டாங்க. சரி, அடுத்த படத்திலேயாவது பாடச் சான்ஸ் தாங்கன்னு கேட்டேன்!''

''தந்தாங்களா?''

''இல்லே. ரவிகுமார் ஆபரேஷன் முடிஞ்சு இப்ப சௌகரியமா வந்துட்டான். அவன் இருக்கிற வரைக்கும் எனக்கு சான்ஸ் தர முடியாதுன்னு சொல்லிட்டாங்க. அவன் இருக்கிறவரைக்கும்தானே? அவனே இல்லாமப் பண்ணிட்டா... எல்லா சான்சும் எனக்குத்தான் வரும். அதனுலதான்...''

''அவரைக் கொலே செய்யணும்கிறீங்களா?''

''ஆமா. நாளேக்கு ராத்திரி பத்து மணிக்குக் காட்டாங்குளத்தூர் கிராமத்தில, அவன் பாட்டுக் கச்சேரி இருக்கு. அவன் முதல் பாட்டுப் பாடி முடிச்சதும் நீ அவனேச் சுட்டுடு. அடுத்த நிமிஷமே உன்னே நீயே சுட்டுக்கிட்டுத் தற்கொலே பண்ணிக்க... யாருக்கும் எதுவும் தெரியாது. என்ன சொல்றே?''

வ. தேனப்பன்

''நான் வேட்டையாடவெல்லாம் போய்க் குறி தவறாமச் சுட்டிருக்கேங்க. ஆனா அவ்வளவு பெரிய கூட்டத்திலே நேருக்கு நேரா நின்னு எப்படிச் சுட முடியும்?''

''அப்ப பின் பக்கமா நின்னு சுட்டுடு. முதல் பாட்டு முடிஞ்சதும் டக்குன்னு பின்னால நின்னு சுட்டுடு. சரியா. இந்தா பணம் பத்தாயிரம். காதும் காதும் வைச்சமாதிரி கப் சிப்புன்னு காரியத்தை முடிச்சிடு!'' என்று அவனை அனுப்பி வைத்து விட்டு நிம்மதியாக மெத்தையில் விழுந்தான் சதீஷ்.

இனி ரேடியோவில் ஒரு நாளைக்கு நூறு தடவை சதீஷ் பாடியது... சதீஷ் பாடியது... என்று எதிரொலிக்கும் என்ற நினைப்பில் மிதந்தபடி தூங்கினான்.

**கா**ட்டாங்குளத்தூர். இரவு ஒன்பதரை மணிக்குத் துப்பாக்கியும் கையுமாக நாகராஜ் வந்து இறங்கினான். சரியான பட்டிக்காட்டானைப் போலக் கக்கத்தில் வைத்திருந்த ஒரு பைக்குள் துப்பாக்கியை ஒளித்து வைத்திருந்தான்.

சாராயத்தை வாங்கி ஊற்றிக் கொண்டான்.

குப்பென்று 'கிக்' தூக்கியது.

டங்குடக்கர டக்கர டக்கர என்று முட்டை புரோட்டா சட்டியின் கரண்டிகள் டிஸ்கோ டான்ஸ் ஆடிச் சாப்பிடக் கூப்பிட்டன. கடைசிச் சாப்பாடு. வாய்க்கு ருசியாக— வயிறு முட்டத் தின்றான்

பாட்டுக் கச்சேரி தொடங்கப் போகிறது என்று டிரம்ஸ் மத்தளங்கள் அடித்துக்கொண்டன. கப்சிப் என்று கொஞ்ச நேர அமைதிக்குப் பின் கச்சேரி தொடங்கியது.

கணபதியைத் துணை செய்யுமாறு அழைத்துக்கொண்டிருந்த குரல் – யாருடையது? வித்தியாசமே இல்லாமல் அது ரவிகுமாருடையதுதான்.

பாடல் முடியப்போகும் நேரம் நாகராஜ் வேகமாகக் கச்சேரி நடக்கும் இடத்துக்கு வந்தான். வாத்தியக் கோஷ்டியின் பின் பக்கம் போனான்.

பாடல் முடிந்தது.

''டிஷ்யூம்''

''டிஷ்யூம்.''

மேடைப்பாடகனும் நாகராஜும் சுருண்டு விழுந்தனர்.

ஹைதராபாத் போயிருந்த ரவிகுமார் வர இயலாததால் திடீரென்று சதீஷைப் பாட அழைத்து வந்ததோ... சதீஷ் இவனைத் தேடி அலைந்ததோ நாகராஜுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.



## ஆண் - பெண் நல்வாழ்வு வாழ அழைக்கிறோம்

பிரபல பழனி வைத்திய திலகம், வைத்யராஜ்

**டாக்டர் எஸ். காளிமுத்து, R.M.P. (IND). V.V.C. A.M.I.H.,**

அவர்களிடம் சிகிச்சை பெற்று குணமும், மகிழ்ச்சியும் அடையுங்கள்

சித்த வைத்தியத்தில் இந்தியாவின் சுற்றுப் பயணத்தில் தனிச் சிறப்புப் பெற்றவர், சித்த வைத்திய மாமன்னன், சித்த வைத்தியச் செம்மல், சித்த வைத்தியக் கலைவேந்தன், வைத்தியத் திலகம், வைத்யராஜ், பல பாராட்டுப் பட்டங்களும், மெடல்களும், பதக்கங்களும் பெற்றவர், பல தலைமுறைகளாக வைத்தியக் குடும்பத்தின் ஒரே வாரிசாகத் திகழ்பவர், முன்னாள் சென்னை, நாட்டு வைத்தியக் கல்லூரியில் வி.வி. கோர்ஸ், சித்த வைத்தியமும் ஆங்கில வைத்தியமும் பயின்றவர், ஹோமியோபதியிலும், ஆயுர்வேதத்திலும் அரசாங்கத் தாரால் பதிவு பெற்றவர். முதன் முதலாக டெல்லி, பூனா, பம்பாய், பெங்களூர் மற்றும் தமிழகம் எங்கும் சுற்றுப் பயணம் செய்து, பல்லாயிரக் கணக்கான வியாதியஸ்தர்களைக் குணப்படுத்தி நற்சாட்சிகளும் பெற்றவர். உலகப் புகழ் பெற்ற சிட்டுக்குருவி லேகியம், தங்கபஸ்பம் போன்ற ஏராளமான மருந்துகள் தயாரித்து தனிப் பெயர் பெற்றவர் இவரே.

### மேற்கண்ட தொந்தரவுகள் இருந்தால் அலட்சியம் செய்யாதீர்கள்

தளர்ச்சி, குழந்தை பாக்கியம் இல்லாத பிரச்னை, உடல் பலஹீனம், இல்வாழ்க்கையில் மகிழ்ச்சிக் குறைவு, உடனே பலஹீனம், ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, தேக வலி, நித்திரைக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு, உறுப்புக்கள் தளர்வு, அடிக்கடி சிறுநீர், சரும நோய்கள், வயிற்றுவலி, ஆ. இருமல், இளைப்பு, தும்மல், நவீன வியாதிகள், வாய்வு, மற்றும் இதில் குறிப்பிடாத வியாதியஸ்தர்களுக்கு எமது 88 வருட அனுபவ மருந்துகளால் சுகவாழ்வு வாழலாம். ஆர்டருடன் மருந்து விவரங்களைக் குறிப்பிட்டு வி.பி.பி. தபால் பார்சலில் பெறலாம். வி. பி. பி. தபால் செலவு இலவசம். கேம்பிலும், நேரிலும் டாக்டரிடம் மருந்துகள் பெறலாம்.

(பழனி சித்தர் மருந்துகளே பாரில் சிறந்தவை என்பது உலகம் அறிந்ததே)

ஒரு மாத சிகிச்சை மருந்துகள்

---

**தங்கபஸ்பம், ஸ்பெஷல் செட் ரூ. 330, தங்கபஸ்பம் சிட்டுக்குருவி லேகியம் 30 வேளை ரூ. 60, 60 வேளை ரூ. 120, 90 வேளை ரூ. 180**

---

**ஸ்பெஷல் லேகியம், ஸ்பெஷல் பஸ்பம்** (மிக உயர்தரம்) **ரூ. 90**

---

**ஆ. இருமல் செட் ரூ. 124, சரும நோய் செட் ரூ. 140, 280, வயிற்று வலி செட் ரூ. 92**

---

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி, விலாசங்கள் கவனிக்கவும்:**

1-ந் தேதி திருநெல்வேலி, நெல்லை லாட்ஜ், ஜங்ஷன் ரோடு, போன் 147, காலை 8 மணி முதல் 12 மணிவரை
1-ந் தேதி நாகர்கோவில், பகல் 2 மணி முதல் 4 மணிவரை, ஸ்ரீ உடுப்பி கிருஷ்ண பவன், தபாலாபீஸ் சந்திப்பு
2-ந் தேதி மதுரை மணீஸ்கபே, டவுன்ஹால் ரோடு, போன்: 22019 காலை 8 முதல் பகல் 12 மணி வரை
2-ந் தேதி புதுக்கோட்டை, மாலை மணி 4 முதல் 5-30 மணி வரை, சாந்தி லாட்ஜ் (வசந்தா லாட்ஜ்) போன்: 46
3-ந் தேதி காரைக்குடி, காலை 9 மணி முதல் 11 மணி வரை, ஏ.வி.எம்.பி.எஸ். ரெஸ்ட் ஹவுஸ், போன்: 309
3-ந் தேதி பட்டுக்கோட்டை, பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை, ஹோட்டல் அலங்கார், மணிக்கூண்டு சமீபம்
3-ந் தேதி மன்னார்குடி, மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை, மன்னை லாட்ஜ், ஸ்டேட் பாங்க் அருகில்
4-ந் தேதி திருச்சி, ஹோட்டல் அஜந்தா, ஜங்ஷன் ரோடு, காலை 8 மணி முதல் பகல் 2 மணி வரை, போன்: 4501
4-ந் தேதி கரூர், மாலை 3-30 மணி முதல் 5 மணி வரை, பெரியார் லாட்ஜ், ஜவஹர் பஜார்
5-ந் தேதி தஞ்சாவூர், காலை 8 மணி முதல் 12 மணி வரை, ராஜா ரெஸ்ட் ஹவுஸ், போன்: 457
5-ந் தேதி திருவாரூர், மாலை 2 மணி முதல் 4 மணி வரை, அபூபக்கர் பில்டிங், நாகை ரோடு, விஜயபுரம்
5-ந் தேதி நாகப்பட்டினம், தினகர் விலாஸ், ரயில்வே ஸ்டேஷன் எதிர், மாலை 5 மணி முதல் 6 மணி வரை
6-ந் தேதி காரைக்கால், அசோக் லாட்ஜ், பஸ் ஸ்டாண்டு எதிர், காலை 8 மணி முதல் 10 மணி வரை
6-ந் தேதி கும்பகோணம், காலை 12 மணி முதல் 2 மணி வரை, தாஜ்மஹால் லாட்ஜ், பொற்றாமரைக்குளம்
6-ந் தேதி மாயவரம், மாலை 3 மணி முதல் 4-30 மணி வரை, காளியாகுடி லாட்ஜ், பெரியகடை வீதி, போன் 460
6-ந் தேதி சிதம்பரம், மாலை 5-30 மணி முதல் 7 மணிவரை, ஜெயராம் லாட்ஜ்
7-ந் தேதி பாண்டிச்சேரி, காலை 8 மணி முதல் 9-30 மணி வரை, (அருணா லாட்ஜ்) பாரிஸ் லாட்ஜ், ஜவஹர்லால்
7-ந் தேதி திருவண்ணாமலை, காலை 10 மணி முதல் 12 மணி வரை, மாடர்ன் கபே, (தேரடி வீதி, போன்: 352
7-ந் தேதி செங்கல்பட்டு, மாலை 4 மணி முதல் 6 மணி வரை கணேஷ் லாட்ஜ்
7-ந் தேதி கடலூர் என்.டி. காலை 10-30 மணி முதல் 12 மணி வரை, ஹோட்டல் பிருந்தாவனம்
10, 11-ந் தேதி சென்னை, காலை 9 மணி முதல் 12 மணி வரை, 3 முதல் 5 மணி வரை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்
12-ந் தேதி காஞ்சிபுரம், ஸ்ரீராமா லாட்ஜ், நெல்லுக்காரத் தெரு, காலை 10 மணி முதல் 12 மணி வரை
12-ந் தேதி ஆரணி பகல் 3 மணி முதல் 5 மணி வரை கிரிஜா லாட்ஜ், காந்தி சிலை எதிரில். போன்: 83111
13-ந் தேதி வேலூர், என். ஏ. காலை 10 மணி முதல் 12 மணி வரை, அஜீஸ் மேன்ஷன்ஸ், போன்: 123
13-ந் தேதி குடியாத்தம், பகல் 3 மணி முதல் 5 மணி வரை, அலங்கார் லாட்ஜ்
13-ந் தேதி கிருஷ்ணகிரி, காலை 9 மணி முதல் 10 மணி வரை, ஸ்ரீராம் லாட்ஜ், போன்: 129
13-ந் தேதி தர்மபுரி, பகல் 12 மணி முதல் 1 மணி வரை, சீனிவாசா லாட்ஜ்
13-ந் தேதி சேலம், பகல் 2 மணி முதல் மாலை 5 மணி வரை, லட்சுமி ராஜ்பவன், போன்: 3301
14-ந் தேதி மதுரை காலை 9 மணி முதல் 12 மணி, மாலை 2 மணி முதல் 4 வரை, சந்தானம் லாட்ஜ்
15-ந் தேதி ஈரோடு, காலை 10 மணி முதல் 12 மணி வரை, நவபவனம் லாட்ஜ், போன்: 907
15-ந் தேதி திருப்பூர், பகல் 2 மணி முதல் 4 மணி வரை, ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ், போன்: 186
16-ந் தேதி கோவை காலை 9 மணி முதல் 12 மணி வரை, விஜயா லாட்ஜ், போன்: 22669
17, 18, 19-ந் தேதி சென்னை நியூ உட்லாண்ட்ஸ் ஹோட்டல் காலை 10 முதல் 12 மணி வரை, மாலை 3 முதல் 5 வரை (போன்: 83111
22-ந் தேதி கோவை, காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை ஹோட்டல் குரு
22-ந் தேதி பொள்ளாச்சி, மாலை 2 மணி முதல் 4 மணி வரை, கோபால் பில்டிங், போன்: 666
23-ந் தேதி முதல் 30-ந் தேதி வரை பழனி தலைமை வைத்தியசாலை.

---

எமது மருந்துகள் கிடைக்கும் இடம்: **கவிதா எண்டர்பிரைசஸ்,**

**28, வாலர்ஸ் ரோடு,** (மவுண்ட் ரோடு, பி. ஆர். & சன்ஸ் அருகில்) **சென்னை-600 002**

---

GOVT. REGD. T.M. No. 204841 REGD. 15443 MFG. LIC. No. 5

போன்: 316, 316-A, 420 தந்தி: சித்தர்

# பழனி சித்தர் வைத்தியசாலை, பழனி-624 601

(பழைய தாராபுரம் ரோடு, (இந்தியாவின் மாபெரும் வைத்திய ஸ்தாபனம்)

# நடுவில் நின்ற வடுவூர்

ஆனந்தி



⌘ வடுவூர் ராமர்-உற்சவர்

**தக்ஷிண** துவாரகை என்று மன்னார்குடி க்ஷேத்திரத்தைக் கூறுவது போலவே தக்ஷிண அயோத்யை என்று அருகிலேயே உள்ள வடுவூர் புகழ் பெற்றிருக்கிறது. மன்னார்குடி ராஜகோபாலன் சந்நிதியில் அர்ச்சனை செய்த பிறகு அந்தக் குருக்கள் ''வடுவூருக்குப் போய் ராமனை சேவியுங்கள். ரொம்ப விசேஷமான ஸ்தலம். கிட்டேதான் இருக்கிறது. என் தகப்பனார் இருக்கிறார். ரொம்ப நன்னா தரிசனம் பண்ணலாம்'' என்று கூறினார்.

ஸ்ரீ கோபாலன் தன்னுடைய மூறு சிறப்பான ராமாவதார கோலத்தைப் பார்க்கச் சொல்வது போலத் தோன்றியது.

வைஷ்ணவ க்ஷேத்திரங்களில் ஓர் அலாதியான நெருக்கம் நமக்கு ஏற்படுகிறது. யார் வந்தாலும் சந்நிதிக்கு எதிரில் வந்த உடனே 'வாங்கோ, வாங்கோ!' என்று அழைத்து நாம் கேட்காமலேயே கோவிலின் சிறப்பையும் மூர்த்தியின் பெயரையும் சொல்லி ஆழ்வார்கள் பாடிப் பரவிய அழகு தமிழில் உபசாரம் செய்கிறார்கள். பரந்தாமனின் அநுக்ரஹத்தை வாங்கிக் கொடுத்து அனுப்புவதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். நாம் அசட்டையாக அர்ச்சனைக்கு ஒன்றும் கொண்டு போகாவிட்டால் கூட ''இங்கே எல்லாம் இருக்கே!'' என்று கூறி ஒரு கற்கண்டை வைத்து நிவேதனம் செய்து எண்ணெய்த் திரியினால் திருமுக மண்டல தெரியக் காட்டி, பிறகு பாத தரிசனம் செய்வித்து, ''திருவடி சேவை ஆச்சா! ஆச்சா!'' என்று பரிவோடு கேட்கிற பண்பாட்டை மிகவும் போற்ற வேண்டும்.

இந்தப் பண்பாட்டுக்கு ஓர் எடுத்துக்காட்டாக வடுவூரில் குருக்கள் ஸ்ரீராகவ தீட்சிதர் விளங்குகிறார் என்பதோடு வெண்கலக் குரலில் அவர் அர்ச்சனைசெய்தபோது ராமனே நேரில் வந்து காட்சி யளிப்பது போன்ற எண்ணத்தை ஏற்படுத்தி விட்டார். ஸ்ரீ கோதண்டராமனின் கருணை பொழியும் கண்களும், முக்தியளிக்கும் முறுவலும் அப்படியே உள்ளத்தைக் கவருகின்றன. நம்மைப் பார்த்து முறுவலிப்பது போலவே தோன்றுகிறது. சீதாப்பிராட்டியாரோ ராமபிரான் இருக்கின்ற பெருமிதப் புன்னகையுடன் தன் கணவரின் பாத கமலங்களை நோக்கியவாறு காட்சி தருகிறார். 'அவருடைய பாதங்களைப் பற்றிக் கொள்ளுங்கள். என் அருளுக்குப் பாத்திரமாவீர்கள்' என்று கூறுவது போலக் காட்சி யளிக்கிறாள்.

இது ஒரு காலத்தில் கோபாலனுடைய கோவிலாக இருந்ததாம். தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர மன்னர் கனவில் ஸ்ரீ ராமபிரான் தோன்றி, தலைஞாயிறு என்ற ஊரில் தாம் புதைந்து கிடப்பதாகவும் தம்மை அகழ்ந்தெடுத்து ஆராதனை செய்யுமாறும் கூறினாராம். மன்னர் கனவு நினைவாயிற்று. திவ்விய திருமேனிகளைக் கண்டெடுத்து விட்டார்கள். மன்னன் அவற்றை எடுத்துச் செல்ல முயன்ற போது அந்த ஊர் மக்கள் தடுத்தார்கள். லக்ஷ்மணர், பரதர் திருமேனிகளை மட்டும் அவர்களுடைய ஊரில் விட்டுவிட்டு ஸ்ரீ

⌘ வடுவூர் ராமர் கோவில்





✕ வடூர் ராமர் கோவில் கர்ப்பக்கிருஹம்

கோதண்ட ராமர், சீதை, அனுமான் இவர்களைப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டு மன்னன் தஞ்சைக்குப் புறப்பட்டான். வடுவூர் வந்ததும் அங்கே தங்கினார்கள். அவ்வூர்வாசிகள் ஸ்ரீ ராமபிரானின் அழகில் ஈடுபட்டு அந்தச் சிலை வடிவங்கள் தங்கள் ஊரிலேயே நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று அரசனிடம் வேண்டினார்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அரசரும் கோதண்ட ராமரை அவ்வூர்க் கோயிலிலேயே பிரதிஷ்டை செய்ததாகக் கர்ண பரம்பரைச் செய்தி.

இந்த ஊரில் திருக்கல்யாணத் திருக்கோலம் மிகவும் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. கோதண்டராமருக்குக் கிருஷ்ணாலங்காரம் செய்து பார்த்து மகிழ்வார்கள். விஷ்ணு அலங்காரப் பிரியர் ஆனபடியால் ஏராளமான ஆபரணங்களை அடியார்கள் செய்து சாற்றியிருக்கிறார்கள். மூலவருக்கு மிகவும் அரியதான சாளக்ராம மாலை சாத்தப்பட்டிருக்கிறது. ஸஹஸ்ரநாம மாலைகளும் அணிவிக்கப் பட்டிருக்கின்றன.

தீபாராதனை காட்டும்போது கோதண்ட ராமர், சீதாபிராட்டியார் இருவருடைய நெற்றியிலும் வைரத்திலகம்ஜொலிக்கின்றது. பிராட்டியாரின் திலகத்தில் உள்ள மரகதம் பசேலென்று ஒளி சிந்துகிறது. காதுகளில் பழைய சம்பிரதாயத் திருவாபரணங்கள் குருடு முதலியவைகளை எவ்வாறு அணிவிக்கிறார்களோ தெரியவில்லை. காரை மாலை பதக்கங்கள் அணிந்து மங்கள வடிவாய் நிற்கிறாள் ஜானகி. சீதைக்குத் தன்னுடைய ஆபரணங்கள் அனைத்தையும் அணிவித்து அழகுபார்த்த அநசூயா தேவியைப் போல் நாமும் தாயாருடைய அலங்காரங்களைக் கண்டு மகிழ்கிறோம்.

திருவாபரணங்கள் அணிவது வெறும் அழகுக்காக மட்டுமல்ல. சிற்சில கற்களுக்குச் சில சக்திகளை ஆகர்ஷித்துக் கொள்ளும் தன்மை உண்டு என்று சாத்திரம் படித்தோர் கூறுகிறார்கள். சக்தியுள்ள ரத்தினங்கள் தெய்வத் திருமேனிகளுடைய அழகுக்கு அழகு செய்யும் அணிகலன்களாக விளங்கும் போது அந்தத் தெய்வங்களின் சக்தியால் இன்னும் மேன்மை பெற்று விடுகின்றன. நம்முடைய வழிபாடும் சேரச் சேர இன்னும் அழகும் பொலிவும் சக்தியும் பெற்று விளங்குகின்றன. தெய்வத் திருவருளை ஆகர்ஷித்து நமக்குஅளிக்கும்தன்மை பெற்றுவிடுவதாகக் கூறுகிறார்கள்.

நமது நாட்டுப் பெரியோர் இதையெல்லாம் அறிந்து கோவிலில் குடிகொண்டு அருள் பாலிக்கும் தெய்வத் திருமேனிகளுக்கு விதவிதமான ஆபரணங்களைக் கலையழகு மிளிரச் செய்து அணிவித்து மகிழ்ந்தார்கள். கிரீடமும் ஒட்டியாணமும் கல்லிழைத்த மகரி பதக்கங்களும் ஒப்புவமையற்ற கலைப் பொருட்கள். இவை நமது நாட்டுப் பண்பாட்டினால் உண்டான விலை மதிப்பற்ற செல்வங்கள். அந்த எண்ணத்துடன் கோவில் விக்கிரகங்களின் மீது சொரியப் பட்டிருக்கும் திருவாபரணங்களைப் பார்க்கும்போது மனம் விம்மிதம் அடைந்து பூரிக்கிறது.

ராமபிரானையும் சீதாப்பிராட்டியையும் வணங்கி விடை பெறும்போது, ''இந்நாட்டில் ராமராஜ்யம் சீக்கிரத்தில் நிலவும்படி அருள்புரியுங்கள்'' என்று உள்ளம் பிரார்த்திக்கிறது.

புகைப்படங்கள்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

✕ கருட வாகனம்



# இலவசம்




## காட்பரிஸ் ஜெம்ஸ் ஒரு பேக்
## போர்ன்விடா 500 கிராம் பேக்குடன்!

விசேஷ சலுகை! விசேஷ லேபிள் கொண்ட 500 கிராம் போர்ன்விடா டின் அல்லது ரீஃபில் பேக் கேட்டு வாங்குங்கள். அதற்குள் காட்பரிஸ் ஜெம்ஸ் ஒரு இலவச பேக் கிடைக்கும்.






காட்பரிஸ்

**போர்ன்விடா**

**உங்களோடு வளரும் நன்மை**

OBM/1083/TM

# யூ.எல்.ஐ.பியில் முதலீடு செய்ய மூன்று முக்கிய காரணங்கள்.

யூ.எல்.ஐ.பி (யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் பிளான்) உங்கள் குடும்பத்துக்கு பாதுகாப்பு கொடுப்பதுடன் வேறு சில நன்மைகளையும் கொடுக்கிறது.

<u>வரிச்சலுகை</u> : ஆண்டு தோறும் யூ.எல்.ஐ.பி யில் முதலீடு செய்யும் உங்கள் பணத்திற்கு பிரத்யேக வரிச்சலுகை கிடைக்கிறது.

<u>ஆயுள் பாதுகாப்பு</u> : நீங்கள் சேர்ந்திடும் குறியீட்டுத் தொகைக்கு மருத்துவ பரிசோதனை இல்லாமலே ஆயுள் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.

<u>விபத்து பாதுகாப்பு</u> : ரூ 15,000 வரை விபத்து பாதுகாப்பும் அளிக்கப்படுகிறது.

இது மட்டுமா ? முதலீட்டுக்கு அதிக வருமானமும் உண்டு.

| காலம் | வருடாந்திர தவணை தொகை | குறியீட்டுத் தொகை | திட்ட முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| 10 வருடங்கள் | ரூ 1,200 | ரூ 12,000 | ரூ 18,500 |
| 15 வருடங்கள் | ரூ 800 | ரூ 12,000 | ரூ 23,000 |

ரூ 12,000 மதிப்புள்ள யூ.எல்.ஐ.பி திட்டத்தில் சேர்ந்து 3 ஆண்டுகள் கழித்து மற்றுமொரு திட்டத்திலும் சேரலாம். வரிகளைத் தவிர்த்திட திட்டமிடுங்கள் இப்பொழுதே. இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆஃப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம் : பம்பாய்
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
பிராந்திய செயலகம் :
ரெஜீனா மான்ஷன், 46 செகண்ட் லைன் பீச்,
சென்னை-600 001. போன் : 27433

எங்கள் முக்கிய பிரதிநிதிகள் : ● ஏ. தனபால், 10-ஜே, ஹிலரிரோடு, கோவை-641 018 போன் : 34776 ● எம், ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி காலனி, மதுரை : 625 002 போன் : 30160 ● கே. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி நகர், தஞ்சாவூர் : 613 007 போன் : 1224 ● என்.கே. இன்கர்சால், 155 சுவர்ணாம்பிகை தெரு, அன்னதானபட்டி சேலம் : 636 002 போன் : 64302 ● எம்.எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் ஹைரோடு, பாளையங்கோட்டை : 627 002 போன் : 2395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's-UTI. 74.82.TM. C



வி. ஆர். தீனதயாளு

# சுத்திகரிப்பு ஆலையின் விஸ்தரிப்பு



சமையல் காஸுக்குப் பதிவு செய்துவிட்டுக் காத்திருப்போருக்கும், போன் செய்த உடன் கிடைக்கும் நாள் எந்நாளோ என்று ஏங்கும் இல்லத்தரசிகளுக்கும் ஒரு நல்ல செய்தி:

மெட்ராஸ் ரிஃபைனரிஸ் ஆலை விரிவாக்கப்படுகிறது. ஆண்டுக்கு 2.8 மிலியன் டன்னிலிருந்து 5.6 மிலியன் டன்னாக இதன் உற்பத்தித் திறன் அதிகரிக்கப்படவிருக்கிறது. இப்போது உற்பத்தியாகும் சமையல் காஸ் ஆண்டுக்கு 44000 டன் என்றால், இனி 1,10,000 டன்னாக உயர்த்தப்படும். அது போலவே மண்ணெண்ணெய், டீசல்...

இவை எப்போது சாத்தியமாகும்?

அதிகமில்லை. அடுத்த ஆண்டு இறுதியிலேயே.

இங்கே சுத்திகரிக்கப்படும் க்ரூட் என்னும் மூலப் பொருள் இரான் நாட்டிலிருந்து வருகிறது. பாம்பே ஹையிலிருந்தும் இனி வரலாம். ஆனால் இந்த ஆலை இரான், அரபு நாடுகள் க்ரூடைச் சுத்திகரிக்க மட்டுமே வடிவமைக்கப்பட்டது. இது போல் ஒவ்வொரு ஆலையும் ஒவ்வொரு விதமான 'க்ரூடை' அனுசரித்து அமைக்கப்படுகிறது. (குஜராத்திலுள்ள அங்கலேஷ்வரிலிருந்து கிடைக்கும் க்ரூட்தான் உலகிலேயே மிக உயர்தரமானதாம். இதில் சல்ஃபர் மிகக் குறைவு.)

இந்த ஆலையின் விரிவாக்கத்துக்கு 160 கோடி ரூபாய் செலவாகும். நாற்பது கோடி ரூபாய் இதற்காக உலக வங்கி கடன் தருகிறது.

மண்ணெண்ணெயில் அடங்கியிருக்கும் ஒரு கூட்டுப் பொருள் (additive) தற்போது உபயோகமில்லாமலே வீணாகிக் கொண்டிருக்கிறதாம். இதைத் தனியாகப் பிரித்து இதிலிருந்து சலவைப் பொருளுக்குத் தேவையான மூலப் பொருட்கள் தயாரிக்கத் தமிழக அரசின் 'தொழில் துறைப் பகுதி திட்டமிட்டு வருகிறது.

பரோடாவில் உள்ளது போல்வே Fluid Catalytic Cracking என்கிற நவீன முறை அடுத்த ஆண்டு கையாளப்பட இருக்கிறது. இந்த முறைதான் உற்பத்தியை இரு மடங்கு ஆக்கும் திறன் வாய்ந்தது.

இந்த ஆலையிலிருந்து வெளியேற்றப்படும் கழிவு நீரால் சுற்றுப்புறச் சூழலில் பாதிப்பு ஏதும் உண்டாவதில்லை என்பது முக்கிய அம்சம். அவ்வளவு தூரம் சுத்திகரித்த பிறகே நீரை வெளியேற்றுகிறார்கள்.

இந்தியா பெட்ரோலியப் பொருட்கள் உற்பத்தியில் எப்போது சுயதேவை பூர்த்தி நிலையை அடையும்? பொறுங்கள்:

இன்னும் மிகச் சில வருஷங்களிலேயே!

(விவரங்களைத் தெரிவித்தவர்: ஆலையின் சேர்மன் திரு வீ. ஆர். தீனதயாளு)

பேட்டி: சாருகேசி, தமயந்தி

"यस्मिन्देशेहि यो जात : तस्मै तज्ञौषधं हितम् ॥"

"எந்த தேசத்தில் (சீதோஷ்ண நிலையில்) எவன் பிறந்திருக்கிறனே அவனுக்கு அந்நாட்டு மூலிகைகளே சிறந்த பலனை அளிக்கும்."

—(சரகஸம்ஹிதை)

**கும்பகோணம் "லலிதா பார்மஸி" மருந்துகளின் சிறப்பு அம்சங்கள்**

ஸ்ரீ காஞ்சி பெரியவர்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட பகவான் ஸ்ரீ தன்வந்திரியின் ஸன்னதியில் **மருந்துகள் தயாராவது.**

பல வருஷங்கள், முறைப்படி "ஆயுர்வேதத்தை" அத்யயனம் செய்த நிபுணர்களின் நேர்பார்வையில் **மருந்துகள் தயாராவது.**

எந்த மருந்தையும் எளிதில் முறைப்படி தயாரிக்க உதவியாகப் பல உயர் வைத்ய நூல்கள் கொண்ட புத்தகசாலை, சிறந்த மூலிகைச்சாலையுடன் இணைந்து விளங்குவது.

**சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு**

# லலிதா பார்மஸி

(ஸ்தாபிதம் 1942)

**தலைமை ஆபீஸ் : கும்பகோணம் Pincode-612 001** போன் : 128

DRUG LICENCE No. 40/78

(மத்திய அரசால் ஏற்றுமதிக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது)

கிளைகள் :

**மஹாதானத் தெரு, மாயூரம்-609 001** போன் : 379
**வடக்கு வீதி, சிதம்பரம்-608 001**
**நெ. 39, ரங்கநாதன் தெரு, சென்னை-600 017** போன் : 441454
**நெ. 105, கச்சேரி ரோடு, சென்னை-600 004** போன் : 73007

கடிதம் மூலம் வைத்திய ஆலோசனை பெற விரும்புவோர்கள் 50 பைசா தபால் தலையுடன் தலைமை அலுவலகத்திற்கு எழுதக் கோருகிறோம். (கடிதங்கள் ரகசியமாக வைக்கப்படும்.)

---

கேசம் அடர்ந்து செழித்து
ஆரோக்கியத்துடன்
ஒளிசிந்தச் செய்கிறது

**ஸ்வஸ்திக்**

# பெர்ஃப்யூம்ட் கேஸ்டர் ஹேர் ஆயில்






கேசம் அழகாக ஒளிர, நாள் முழுதும் பளபளப்புடன் எடுப்பாகத் திகழச் செய்யும் ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்ட் கேஸ்டர் ஹேர் ஆயிலை உங்கள் குடும்பம் முழுதும் விரும்பும்.

**ஸ்வஸ்திக்** ஹவுஸ்ஹோல்டு & இன்டஸ்ட்ரியல் ப்ராடக்ட்ஸ், பம்பாய்

# தண்ணீர்ப் பிச்சை

**சுதந்திர இந்தியாவில் குடி நீருக்காகப்
போராடும் ஒரு குடிசைக்காரியின் அவல நிமிஷங்கள்**



நெஞ்சை நனைக்கத்
தண்ணீ ரில்லை
நினைத்தால் அழுகை மீறிவரும்.
பஞ்சச் சேரியின்
பங்கை வழங்க
எப்போ தினிமேல் 'லாரி' வரும்?

தண்ணீர் கேட்ட
தன்பிள் ளைக்குத்
தாய்ப்பால் தந்தே உருகுகிறாள்
தொண்டை வறண்டு
தூர்ந்திடு மென்று
தாயும் தாய்ப்பால் பருகுகிறாள்.

'தாய்ப்பால் லஞ்சம்'
மறுத்து. பிள்ளை
தண்ணீர் கேட்டே அடம்பிடிக்கும்
தீய்க்கும் வெயிலில்
தாயின் கால்கள்
தண்ணீர் வரிசையில் இடம்பிடிக்கும்

நின்று களைத்து
நித்தம் இளைத்து
ரத்தம் வேர்வையாய் வற்றிவிடும்
தண்ணீர் 'லாரி'யின்
சப்தம் கேட்டால்
உயிரில் பாதி இற்றுவிடும்.



ஏனைய பெண்களின்
இடையே நூலாய்
இளைத்துப் போனவள் அலைகின்றாள்
பானையின் கற்பைப்
பாதுகாக்கவே
பாவிப் பெண்ணவள் நெளிகின்றாள்.

தன்னை உருக்கித்
தாரை வார்த்தபின்
தண்ணீர்ப் பிச்சை கிடைக்கிறது
சின்னப் பிள்ளையின்
தினைவால் பறவை
சிறகை அசைக்கத் துடிக்கிறது.

உயிரைப் பிதுக்கும்
கூட்டம் அவளை
ஒதுக்கித் தள்ளுது வீதியிலே.
மயங்கி விழுந்த
மயிலின் முகத்தில்
நீர்த்துளி தெளிக்க நாதியில்லை.

மங்கை சுமந்த
தங்க மண்குடம்
மண்ணில் சிதறித் தெறிக்கிறது!
கங்கை காவிரி
இணைப்புத் திட்டம்
கையெழுத் தில்தான் இருக்கிறது!

புகைப்படம்: உத்ரா

# தண்ணீர்! இங்கே தண்ணீர்!



○ நிலத்தடி நீரைக் கண்டறியும் கருவிகளுடன் சாம்பசிவன்

கிணறு வெட்டினாலோ, அல்லது போர் பம்ப் போட்டாலோகூடத் தண்ணீர் கிடைக்குமா, எவ்வளவு ஆழம் தோண்டவேண்டியிருக்கும், சுரக்கும் தண்ணீர் குடிப்பதற்கு ஏற்றதாக இருக்குமா, இது போன்ற பிரச்னைகள் நமக்கு எழுகின்றன. ஆனால் பூமிக்கடியில் தண்ணீர் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்துக் கூறும் நிபுணர்கள் பலர் உண்டு. இவர்களை ஆங்கிலத்தில் Water Diviner என்று அழைக்கின்றனர். இத்தகைய நிபுணர்களில் ஒருவர் சென்னை மயிலாப்பூரில் வசிக்கும் திரு சாம்பசிவன்.

66 வயதைக் கடந்து கொண்டிருக்கும் இவர் கடந்த நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் பாரதத்தின் அனைத்து மாநிலங்களிலும் உள்ள பல நிறுவனங்களுக்கும், கோயில்களுக்கும், குடியிருப்புகளுக்கும் ஆலைகளுக்கும் குடிநீர் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்துக் கூறியிருக்கிறார்.

தண்ணீர் பூமிக்கடியில் பலதரப்பட்ட ஆழத்தில் சிறிய, பெரிய ஓடைகளாக ஓடிக் கொண்டிருக்கிறது. இவற்றை Veins என்று கூறுகின்றனர். இந்த ஓடைகள் செல்லும் பாதையில் தோண்டப்படும் கிணறுகளிலும் இறக்கப்படும் போர் பம்புகளிலும் நீர் வற்றாமல் நிரந்தர ஊற்றாகச் சுரக்கிறது.

நிலத்தடி நீரைக் கண்டுபிடிக்க, திரு சாம்பசிவனுக்கு உதவும் கருவி, திமிங்கிலத்தின் சுமார் பத்து அங்குல நீளமுள்ள மெல்லிய இரு எலும்புகள், தவிர, ''V'' போன்று வளைக்கப்பட்டுள்ள இரும்புக் கம்பி ஒன்றும், செப்பினாலான கம்பி ஒன்றும், மெல்லிய சங்கிலியில் தொங்கும் தந்தத்தினாலான ஊசல் குண்டு (Pendulam) ஒன்றும் வைத்திருக்கிறார்.

ரேடியோ, மற்றும் ஒலி அலைகளைப்போன்று பூமிக்கடியில் ஓடும் நீரிலிருந்தும் ஒருவித அலைகள் வெளிவருவதாக திரு சாம்பசிவன் கூறுகிறார். தரை மட்டத்துக்கடியில் ஓடும் நீரோடைகளின் உயரே நிலத்தின் மீது நிற்கும்பொழுது அந்த அலைகள் திரு சாம்பசிவன்போன்றநிபுணர்களின் உடலில் பாய்ந்து அவர் கையில் ஏந்தியுள்ள 'V' போன்ற வளைக்கப்பட்ட திமிங்கில எலும்புகளைச் சுழலச் செய்கின்றன. இவ்வாறு சுழலுவதிலிருந்து நிலத்தடி நீர் இருக்கும் இடத்தைக் கண்டறிகிறார் திரு சாம்பசிவன். சில சமயம் நிலத்தடி நீரின் வேகம் அதிகமாக இருந்தால் அவரது கையிலேந்திய திமிங்கில எலும்பும் கம்பியும் வேகமாகச் சுழலுவதுண்டு. அவ்வாறு சுழலும் கம்பியை நிறுத்த முற்பட்டால் சில சமயம் அந்த எலும்பும் கம்பியும் உடைந்து விடுவதுண்டு. அல்லது அவற்றை ஏந்திய கையில் காயம் ஏற்படுவதுண்டு.

நீரூற்றின் வேகத்தை இவ்வாறு கணிக்கும் அவர் சுழலும் செம்பினாலான கம்பி உதவியுடன் அந்தத் தண்ணீரின் இன்னைத்தையும் (Density) அறிந்து அந்த நீரின் குடிப்பதற்கேற்ற தரத்தைக் கூறுகிறார். நிலத்தடி நீர் கடல் உள்ள திசையை நோக்கி ஓடினால் அந்த நீர் ஏறக்குறைய நல்ல குடிநீராக இருக்க வாய்ப்பு அதிகம் என்று கூறுகிறார்.

தன் கையில் ஏந்தியுள்ள ஊசல் குண்டு ஆடுவதிலிருந்து அந்த நீர் தரை மட்டத்துக்குக் கீழ் எவ்வளவு ஆழத்தில் ஓடுகிறது என்பதையும் அவர் கண்டறிகிறார். திரு சாம்பசிவனுக்கு 80 சதவிகிதத்துக்கு மேல் வெற்றி கிடைத்துள்ளதாம்.

1934ம் ஆண்டு திரு சாம்பசிவன் பி.ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்த சமயம், ஒரு நாள் சென்னை ராஜதானியின் நிலத்தடி நீர் நிபுணராக பெல்லாரி மாவட்டத்தில் பணியாற்றி வந்த திரு கருடாசல முதலியார் என்பவர் தமது தியாகராயநகர் இல்லத்துத் தோட்டத்தின் ஓர் ஓரத்தில் சில இளைஞர்களை நடந்து வரச் சொன்னார். அவர்களில் ஒருவர் திரு சாம்பசிவன். எல்லா இளைஞர்களும் சாதாரணமாக நடந்து வந்தார்கள். ஆனால் திரு சாம்பசிவன் மட்டும் ஒரு இடத்தைத் தாண்டி வந்தபோது தமது உடலில் ஒருவித விறுவிறுப்பு உணர்ச்சி ஏற்படுவதாக முதலியாரிடம் கூறினார். உடனே திரு கருடாசல முதலியார் நிலத்தடி நீரைக் கண்டறியும் சக்தி திரு சாம்பசிவனிடம் இருப்பதாகவும், அச்சக்தியை வளர்த்துப் பயனடையும்படியும் கூறி, அது பற்றிய நுணுக்கங்களையும் திரு சாம்பசிவனுக்குக் கற்றுத் தந்தார்.

கேரள மாநிலத்தில் இயங்கி வரும் தோஷிபா ஆனந்த் ஆலையைப் பார்வையிட்ட

ஜப்பானிய நிபுணர்கள் அங்கு போதுமான நீர் கிடைப்பது அரிது என்று கூறினார்களாம். தொடர்ந்து திரு சாம்பசிவன் சோதித்தறிந்து கூறிய யோசனைகளின் பேரில் அங்கு நாள் ஒன்றுக்கு இரண்டு லட்சம் காலன் நீர் சுரந்ததாம்.

30 அல்லது 40 அடி ஆழம் துளையிட்டுத் துவாரங்கள் பொருத்திய கூரிய நுனியுடைய குழாய்களைப் பொருத்தி நீரை வெளியே எடுப்பது Filter Point என்று குறிப்பிட வேண்டும். 100 அடி ஆழம்வரை துளைத்து ஆழ்துளைக் குழாய்கள் மூலம் நீரை வெளிக் கொண்டு வருவதையே Borewell என்று கூறுவது சரி. ராஜஸ்தான் மாநிலத்தில் சில இடங்கள் 800 அடி முதல் 1000 அடி வரை நிலத்தைத் துளைத்து நீரைப் பெரிய குழாய்கள் மூலம் வெளிக் கொண்டு வருவதாகக் கூறுகிறார் திரு சாம்பசிவன்.

நிலத்தடி நீரைக் கண்டுபிடித்துக் கூறும் திரு சாம்பசிவனுக்கு ஒரு முறை சோதனை நடத்தியவுடன் உடல் சோர்வடைந்து விடுவதுண்டு. நாள் ஒன்றுக்கு ஐந்தாறு இடங்களில் நிலத்தடி நீரைக் கண்டுபிடித்து உதவி வந்த திரு சாம்பசிவன், முதுமைப் பருவத்தின் காரணமாக இந்நாளில் ஓரிரண்டு இடங்களுக்கு மேல் நீரைக் கண்டுபிடித்துக் கூறச் செல்வதில்லை. அவர் பயன்படுத்தும் கருவிகளிலும் ஒருவித சக்தி பாய்வதால், அவை தளர்வடையாதிருக்க யாரையும் அக் கருவிகளைத் தொட அனுமதிப்பதில்லை.

நிலத்தடி நீரைக் கண்டுபிடித்துக் கூறுவதற்கு 450 ரூபாய்க்கு மேல் சன்மானம் வசூலிக்கிறார் திரு சாம்பசிவன். நிலத்தடி நீர் நிரந்தரமாகக் கிடைக்க மழை அவசியம் என்று கூறுகிறார். மழை இல்லாதபோது நிலத்தை ஆழமாகத் துளையிட்டு நீரை வெளியேற்றிக் கொண்டே போனால் நிலத்தடி நீர் வற்றிக்கடல் நீர் உட்புகுந்து கிணறுகளில் சுரப்பதற்கு வழியுண்டு என்று எச்சரிக்கை விடுக்கிறார்.

கட்டுரை, புகைப்படம்:
ஜனார்த்தனன்



1. ஒரு தொழிற் சங்கத் தலைவருக்கு அடிப்படையாக என்னென்ன தெரிந்திருக்க வேண்டும்?

தொழிற் சட்டங்கள், தொழிலின் நிலை, நாட்டின் அரசியல் – பொருளாதார நிலைமை முதலியவை தொழிற் சங்கத் தலைவருக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும். தொழிலாளர்களின் அனுமதியின்றி எந்த ஒப்பந்தமும் செய்ய மாட்டேன் என்ற உறுதியும், பணம் படைத்த முதலாளிகள் முன் நேர்மையாக நிற்கும் பண்பும் தேவை.

2. பல தொழிலகங்களுக்கு ஒரே தொழிலாளர் தலைவர் இருப்பது நல்லதா? இதற்கு ஏன் வரையறை கூடாது?

ஒருவர் எத்தனை தொழிற் சங்கங்களுக்குத் தலைமை தாங்க முடியும் என்பது அவரது திறமையைப் பொறுத்தது. உச்சவரம்பு கட்டுவதன் மூலம் பெரிய குண மாற்றம் எதுவும் ஏற்படாது.

3. ஒரு தொழிலுக்கு ஒரு யூனியன் என்று சட்டரீதியாக வந்தால் அது நன்மை பயக்குமா பயக்காதா? போட்டித் தொழிற் சங்கங்கள் மூலம் வன்முறைதானே வளர்கிறது? நிர்வாகமும் பயன் பெறுகிறது?

ஒரு தொழிலுக்கு ஒரு யூனியன் என்று சட்டம் இயற்றப்பட வேண்டும் என்று நான் பெரிதும் விரும்புகிறேன். பல ஆண்டுகளாக, பாராளுமன்றத்திலும், சட்ட மன்றத்திலும் இதற்காக நாங்கள் குரல் கொடுத்தோம். அரசும், முதலாளிகளும் அதை விரும்பவில்லை. பிளவுகள் இருந்தால்தானே அவர்களுக்கு நல்லது!

4. தொழிற் சங்கத் தலைவர் நிறுவனத்தின் நலனை மனத்தில் கொள்ளாமல், தொழிலாளருக்கு அதிக சம்பளமும் சலுகைகளும் மட்டுமே பெற்றுத் தருபவராக இருந்துவிடுவது நியாயமானதா?

ஊதிய உயர்வால் தொழில்கள் நலிந்துவிடுவதில்லை. அரசின் தவறான கொள்கைகளே தொழில் நெருக்கடிக்குக் காரணம். நான் சார்ந்து நிற்கின்ற சி. ஐ. டி. யு. அனைத்து இந்தியாவிலும் ஊதிய உயர்வுக்காகப் போராடுகிறது. அதே நேரத்தில் நமது தொழில்களை நாசப்படுத்தும் வரிச்சுமை, இறக்குமதி, ஏற்றுமதி, அந்நிய மூலதனத்திற்கு வழங்கும் சலுகைகள் போன்ற அரசின் தவறான கொள்கைகளையும் எதிர்த்துப் போராடுகிறது.

5. நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கும் நிறுவனங்களில் கூட நிர்ப்பந்தம் காரணமாக அதிகச் சம்பளமோ, போனஸோ சலுகைகளோ கோருவதையும், போராட்டம் நடத்துவதையும் நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

தொழிலில் நஷ்டம் ஏற்பட்டாலும் தொழிலாளி வாழவேண்டாமா? நலிந்துபோன தொழிற்சாலைகளில் போராட்டங்கள் வெற்றிக்கு இட்டுச் செல்லாது. பிரச்னைகளைத் தீர்த்து வைக்கச் சமரச முறைகள் பயனளிக்கும்.

6. ஜப்பான் தொழிலாளரை எதற்கும் உதாரணமாகச் சொல்கிறார்களே, ஏன் நம் தொழிலாளர்களும் அந்த மனப் பக்குவமும் முதிர்ச்சியும் பெற உங்களைப் போன்ற தொழிலாளர் தலைவர்கள் பாடுபடக் கூடாது?

ஜப்பானைப் பற்றி மிகைப்படுத்திக் கூற வேண்டாம். அங்குள்ள நிலைமை முற்றிலும் மாறுபட்டது. நம் நாட்டு ஊதியம் மிகவும் குறைவானது. அரசின் நிலையற்ற கொள்கைகளின் விளைவாகப் பணவீக்கமும், கட்டுக்கடங்காத விலை ஏற்றமும் இங்கே தொழிலாளர்களையும் சாதாரண மக்களையும் வாட்டி வதைக்கின்றன. தேசிய வருமானமும் மக்களின் வாங்கும் சக்தியும் இங்கே மிகவும் குறைவானது.

7. தனியார் துறை - அரசுத் துறை மாதிரி தொழிலாளர் துறை (Workers Sector) நிறுவனங்களை உருவாக்க வேண்டும் என்று முன்னாள் மத்திய அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் ஒருமுறை கருத்துத் தெரிவித்தாரே, அதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

தனியார் துறை, மற்றும் பொதுத் துறை மாதிரி, தொழிலாளர்கள் தனியாகத் தொழிற்சாலைகள் அமைத்திட முடியாது. அதற்குத் தேவையான மூலதனம் எங்கிருந்து அவர்

# சிந்தனை– மேதினச் சிந்தனைகள்

களுக்குக் கிடைக்கும்? தொழிலாளர் துறை என்பது வெறும் கற்பனை வடிவில் இருக்கும்.

**8. லே-ஆஃப் சட்டப்படி நிறுவனம் அரைச் சம்பளம் வழங்க வேண்டும் என்று இருக்கிறது. மின்சார, தண்ணீர் பற்றாக்குறை காரணமாகவும் லே-ஆஃப் அறிவிக்கப்படுகிறது. இதற்கு அரசுதானே பொறுப்பு? அப்போது ஏன் சம்பளத்தை அரசு தரவேண்டும் என வற்புறுத்தக் கூடாது?**

'லே-ஆஃப்க்கு அரசு காரணமாக அமையும் போது சட்டப்படி வழங்க வேண்டிய அரைச் சம்பளத்தை அரசு கொடுக்க வேண்டும் என்று நாங்களும் கேட்கிறோம். ஆனால் அரசோ அதை ஏற்க மறுக்கிறது.

**9. பம்பாய் மில் தொழிலாளர்கள் ஒரு வருஷத்துக்கும் மேலாக ஸ்டிரைக்கில் ஈடுபட்டு, சம்பளமும் இல்லாமல் வேலையும் இல்லாமல் தவிக்கிறார்களே இதற்கு ஒரு முடிவு காண உங்கள் யோசனை என்ன?**

பம்பாயில் இரண்டரை லட்சம் பஞ்சாலைத் தொழிலாளர்கள் பதினைந்து மாதங்களாக வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். இந்திய வரலாற்றிலேயே பெரும் உற்பத்தி இழப்பும், தொழிலாளர்களுக்குப் பெரும் துயரமும் விளைவித்த ஒரு வேலை நிறுத்தம் இது. அந்தத் தொழிலாளர்கள் விரும்பும் தலைமையை அரசும், பம்பாய்ப் பஞ்சாலை முதலாளிகள் சங்கமும் அங்கீகரித்தால் வேலை நிறுத்தம் முடிந்துவிடும். சிறுபான்மையாகிய ஐ. என். டி. யு. சி. சங்கத்தை மட்டுமே அங்கீகரிப்போம் என்று அரசு அடம் பிடிப்பதே இந்த வேலைநிறுத்தத்துக்குக் காரணம்.

**10. ஆளும் கட்சியே ஒவ்வொரு இண்டஸ்ட்ரியிலும் தொழிற் சங்கம் அமைப்பது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

அரசியல் அதிகாரத்தையும் தொழிலாளர் இலாகாவையும் பயன்படுத்தி, போட்டிச் சங்கங்களை உருவாக்க அரசுகள் எடுக்கும் நடவடிக்கைகள் தொழில் அமைதிக்கு ஊறு விளைவிக்கின்றன. இது பற்றிய கசப்பான அனுபவங்கள் தமிழகத்திலும் இந்தியாவிலும் ஏராளம். தொழிற்சங்கங்களைப் பிளவுபடுத்தத் தருணம் பார்த்துக்கொண்டேயிருக்கும் முதலாளிகளுக்கு இந்தப் போக்கு வரப்பிரசாதமாக அமைகிறது. இதனால் பல இடங்களில் வன்முறைகள் ஏற்படுகின்றன. உண்மையான தொழிற்சங்கங்கள் இதை விரும்புவதில்லை.

**11. உயர் ஊதியம் வாங்கும் பாங்குகள், இன்ஷூரன்ஸ் அலுவலகங்களில் இருக்கும் ஊழியர்களும், உடலுழைப்புச் செய்து ஊதிய உயர்வுக்குப் போராடும் தொழிலாளர்களைப் போல் தொழிற் சங்க அமைப்பில் தீவிரமாக இறங்கி இருக்கிறார்களே, இதனால் பொதுமக்கள் நலன் பாதிக்கப்படுவது தெரிந்தும் சில தொழிற் சங்கத் தலைவர்களும் அரசியல்வாதிகளும் அவர்களுக்குத் துணை நிற்பது ஏன்?**

வங்கியிலும் இன்ஷூரன்ஸ் அலுவலகங்களிலும் அதிகப்படியான ஊதியம் வழங்கப்படுவதாக நீங்கள் கூறுவது உண்மையல்ல. ஒரு பட்டதாரி இன்று பெறக் கூடிய அடிப்படைச் சம்பளம் ரூ. 365; பஞ்சப்படி ரூ. 420.99; வீட்டு வாடகைப் படி ரூ. 27.31 நகரப்படி ரூ. 32.85; ஆக மொத்தம் ரூ. 846.15 மட்டும்தான். ஆனால் இதே சென்னை நகரத்தில் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழில் திறனற்ற சாதாரண தொழிலாளி (ஸ்வீப்பர்) பஞ்சப் படியாக மட்டும் ரூ. 860 பெறுகிறார். சம்பளம், வீட்டு வாடகைப் படி, பயணப் படி வேறு. உண்மையில் மத்தியதரச் சிப்பந்திகள், அரசு ஊழியர்கள், கல்லூரி ஆசிரியர்கள், இரயில்வே தொழிலாளர்கள் முதலியோர் நிலைமை பரிதாபத்துக்குரியது. அவர்கள் விஷம்போல் ஏறும் விலைவாசியினால் பாதிக்கப்படும்போது போராடாமல் இருக்க முடியுமா? உழைக்கும் மக்களின் நியாயமான உரிமைகளை வழங்குவதன் மூலம், பெரும்பான்மையான மக்களின் வாங்கும் சக்தியை உயர்த்த முடியும். அதுவே தொழில் வளர்ச்சிக்குச் சரியான வழியும் கூட.

மத்திய அரசு கடைப்பிடிக்கும் தவறான தொழில் கொள்கைக்கு எதிராக, ஆலைத் தொழிலாளர்களும், மத்தியதர ஊழியர்களும், விவசாயப் பெருங்குடி மக்களும் இணைந்து நின்று போராட முன்வருவதைத் தடுப்பதற்காகத்தான் ஒருசில அரசியல் தலைவர்களும் ஆட்சியாளர்களும் வேண்டு

---



## காந்தி பக்தர்

- வி. பி. சிந்தன் வீட்டு பாமரேனியன் நாய், வருபவர்களைக் கழுத்தோடு கட்டிக்கொண்டு விடும். அன்போடு அல்ல; ஆவேசத்தோடு தான்! அதனால் காலிங் பெல் அழுத்தியவுடன் கதவு நாலிலொரு அளவுக்குத்தான் திறப்பார் ஸ்ரீமதி சாரதா சிந்தன். நாயை உள்ளே தள்ளி அடைத்த பிறகுதான் நம்மோடு பேசுவார்,

- சிறிய வரவேற்பு அறையில் ஒரு சின்ன நூலகமே இருக்கிறது. கார்ல் மார்க்ஸ் - ஏங்கல்ஸ்: கலக்டட் ஒர்க்ஸ் ஒரு முழு வரிசை

மென்றே மத்தியதர சிப்பந்திகளின் மீது பழி சுமத்துகிறார்கள்.

**12. இந்தப் பத்து வருடங்களில் கொண்டுவரப் பட்ட தொழிலாளர் நலச் சட்டங்கள் உண்மையி லேயே தொழிலாளருக்கு உதவியிருக்கின்றனவா?**

இந்தப் பத்து ஆண்டுகளில் மேற்கு வங்க அரசு, சில நல்ல திட்டங்களைக் கொண்டு வந்துள்ளது. ஆனால் ஜனாதிபதியின் அங்கீ காரம் இன்னும் அவைகளுக்குக் கிடைக்க வில்லை. தமிழக அரசு உருப்படியான எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று சொன் னால் மிகையாகாது. மத்திய அரசும் இத் துறையில் எந்த முன்னேற்றத்தையும் காண் பிக்கவில்லை.

**13. தமிழக ஆட்சியைத் தொழிலாளர் விரோதப் போக்கு கொண்ட அரசு என்று சிலர் விமர்சிக் கிறார்களே, நீங்களும் அந்த எண்ணம் உடையவர் தானா? அப்படியென்றால் எந்தெந்தக் காரணத் துக்காக அந்தக் குற்றச்சாட்டைக் கூறு கிறீர்கள்?**

தமிழக அரசு தொழிலாளர்களுக்கும், உழைப் பாளி மக்களுக்கும் விரோதமாகச் செயல் படுகிறதா என்ற கேள்விக்கே இடமில்லை. தமிழக அரசின் அனைத்து நடவடிக்கைகளும் தொழிலாளர்களுக்கும், தொழிற் சங்கங் களுக்கும் எதிராகவே உள்ளன; வேலை நிறுத்த உரிமையைப் பறிக்கும் சட்டத்தை இம்மாநில அரசு கொண்டு வந்துள்ளது. தொழிற் சங்கங்களை உடைக்க ஆளும் கட்சி யினர் வன்முறைகளில் ஈடுபடுகின்றனர். காவல் துறை இதற்கு உதவி அளிக்கிறது. தொழிற்சங்கங்களுக்கு ஜனநாயகஉரிமையை மறுப்பதே அரசின் கொள்கையாக உள்ளது.

**14. அமைப்பு ஏதும் இல்லாத தொழிலாளர் (Un organised labour) நலனில் உங்களைப் போன்ற தலைவர்கள் ஏன் அக்கறை செலுத்துவதில்லை?**

அமைப்பு ரீதியாகத் திரட்டப்படாத தொழி லாளர்களின் நிலை படு மோசம்தான். அதிலும் குறிப்பாக காண்ட்ராக்ட், கேஷு வல், அப்ரன்டிஸ், பதிலி முதலிய வகைத் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் சட்டங்கள் இல்லை என்றே சொல்லலாம். தொழிற் சங்கங்கள் இவ்வகையினருக்குக் கைகொடுக்க முன்வர வேண்டும். எங்களது அமைப்பைச் சேர்ந்தவர்கள் இந்த வேலை யைச் செய்து வருகிறார்கள்.

**15. விவசாய அடிப்படை கொண்ட நமது அமைப்பை - இப்போதுள்ள காவிரி நீர்ப் பிரச்னையை நினைவில் கொண்டால் - மாற்றி, தொழில் வள அடிப்படையில் நமது சமூக அமைப்பை உருவாக்கிக் கொள்ள நிர்ப்பந்தம் உண்டாகும் என்று உங்களுக்குத் தோன்றுகிறதா?**

காவிரி நீர்ப் பிரச்னையைப் பேசித் தீர்க்க மத்திய அரசு மீது நிர்ப்பந்தம் செலுத்த வேண்டும். நமது நாட்டின் ஜீவநதிகளின் நீரைப் பயன்படுத்த மத்திய அரசு பெரிதும் தவறியுள்ளது. நமது நாட்டு மக்களில் எண் பது சதவிகிதம் பேர் விவசாயத்தை நம்பி இருப்பதே இச்சமுதாயச் சீர்கேட்டுக்கு அடிப் படையான காரணமாக அமைந்துள்ளது. தங்கு தடையற்ற தொழில் வளர்ச்சிக்கு மத்தியஅரசு கடைப்பிடிக்கும் கொள்கைகள் முற்றிலும் பயனற்றவை.

**16. நிர்வாகத்தில் தொழிலாளர்களின் பங்கு உண் மையிலேயே எங்காவது நடைமுறைப்படுத்தப் படு கிறதா? அதனால் நிர்வாக போர்டில் தொழிலாளர் பிரதிநிதி தொழிலாளருக்குச் சாதகமாக அல்லது பிரயோசனமாகச் செயல்பட முடியுமா?**

நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கு என்பது பல அரசியல் கோஷங்களைப் போல் கவர்ச்சி யாக மட்டும் பயன்படுத்தப்படும் ஒரு கோஷம்தான். ஒரு நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் குழுவில், சம உரிமையுடன் தொழி லாளர்களின் பிரதிநிதிகள் இயங்க அரசும், முதலாளிகளும் அனுமதிப்பார்களா? உற்பத் தித் திட்டங்கள் தீட்டுவதிலும், விலை—தர நிர்ணயிப்புக்களிலும் விநியோகத்தை முறைப் படுத்துவதிலும் தொழிலாளர் — இயக்கு நர்களுக்கு அனுமதி யளிக்கப்படுமா? அரசும், முதலாளிகளும் இதை ஒருபோதும் ஏற்க மாட்டார்கள். ஜனநாயக அடிப்படையில் அமையும் ஒரு புதிய சமுதாயத்தைக் காணு வதன் மூலம்தான் இந்தப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியும்.

பேட்டி: சாருகேசி, தமயந்தி

புகைப்படங்கள்: சுபா

மேலட்டை வண்ணச் சித்திரம்: ம.செ.

---

என்றால், லெனின்'ஸ் கலெக்டட் ஒர்க்ஸ் இன் னொரு வரிசை. ஹரண்ட்ரட் இயர்ஸ் ஆஃப் ஹிந்து. ஜகத்குரு ஆதிசங்கரர் பற்றிய ஒரு தமிழ் நூல் - இவை உடனே கண்களில் படு பவை.

சிந்தன் எப்போது இவற்றை யெல்லாம் படிப்பார்?

"நள்ளிரவு பன்னிரண்டரை, ஒரு மணிகூட ஆகும்!" என்கிறார் ஸ்ரீமதி சாரதா சிந்தன். சம்ஸ்கிருதமும் நன்றாகத் தெரியும் சிந்தனுக்கு.

○ ஒரே பையன் ரவி. இஞ்சினியரிங் கல்வி பயிலும் இறுதியாண்டு மாணவர்.

○ சிந்தன் அவர்களின் குடும்பம் முழுவதும் சில வருஷங்களுக்கு முன் காங்கிரஸ் ஊழி யர்கள்தாம். காந்தி-பக்தர்கள். 1932ல் காந்திஜி கண்ணனூருக்கு வந்தபோது, அவரை விழுந்து வணங்கிய சிந்தனும் அவர் சகோ தரியும் அவரிடம் கையெழுத்துக் கேட்டார் களாம்.

காந்திஜி, 'கையெழுத்துப் போட்டால் என்ன தருவீர்கள்?' என்று சிரித்துக் கொண்டே கேட்டாராம்.

'இது என் தகப்பனார் ஆசையுடன் எனக்கு அளித்த ரிஸ்ட் வாட்ச்!' என்று சிந்தன் தம் கைக்கடிகாரத்தைக் கழற்றிக் கொடுக்க,அவர் சகோதரி, தம் கைகளில் அணிந்திருந்த தங்க வளையல்களை அப்படியே கொடுத்துவிட்டாராம்.

# குழந்தைவேலு ஏன் ராஜிநாமா செய்யவில்லை?

## நீங்கள்




✕ எம். ராஜேந்திரன், லால்குடி

? திருச்சி தமிழ்நாட்டின் இரண்டாவது தலைநகராவதை வரவேற்கிறீர்களா?

! ஒரே தலைநகராக இருக்கும் போது ஆமை வேகத்தில் சில ஃபைல்களேனும் நகர்வதால் ஏதோ இன்றில்லா விட்டாலும் நாளை காரியங்கள் ஏதேனும் நடக்கும் என்று நம்ப வேண்டியதிருக்கிறது. இரண்டு தலைநகரங்கள் என்று ஏற்பட்டுப் போனால் இந்த ஆமை வேகமும் நின்று போகும். ஆட்சி ஸ்தம்பிக்கும். இப்போதுள்ள நிச்சயமற்ற தன்மை இராது. நிம்மதி! எனவே வரவேற்பது தான் உசிதம்.

✕ மோ. க. இரத்தினசாமி, மோகனூர்.

? கலைஞரிடம் தோற்றுப்போன மந்திரி குழந்தைவேலு ஏன் இன்னும் ராஜிநாமா செய்யவில்லை?

! கொடுத்துக் கொடுத்துச் சிவந்த கரங்கள் கல்த்தா கொடுத்து அனுப்பக் காத்திருக்கிறார் போலும்!

✕ கோவி திருநாயகன், பூந்தோட்டம்.

? சினிமாக்களைத் ★ தேர்ந்தெடுத்து வரிச்சலுகை அளிப்பது போல் நல்ல பத்திரிகைகளைத் தேர்ந்தெடுத்துச் சலுகை அளித்தால் என்ன?

! நரி வலமும் போகவேண்டாம். இடமும் போக வேண்டாம். மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தாலே போதும். சமீபத்தில் அரசு மறுபடி மேலே விழுந்து பிடுங்கியிருக்கிறது. விளம்பரச் செலவு, பயணச்செலவு ஆகியவற்றில் இருபது சதம் மீது கம்பெனிகளுக்கு வருமான வரி விதிக்கப்பட்டும் என்று பட்ஜெட்டில் அறிவித்த போது. இதனால் கம்பெனிகள் பத்திரிகைகளுக்குத் தரும் விளம்பரங்களின் அளவு வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளது. இப்படி பத்திரிகைப் பொருளாதாரத்துக்கு அடிக்கடி மேன்மேலும் பல சோதனைகள். ஜனநாயகத்தில் பத்திரிகைகளுக்கு அரசு சலுகை அளிப்பது ஆபத்தானது. உபத்திரவப்படுத்தாமலிருந்தாலே போதும்.

✕ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி.

? என். டி. ஆர். முதலமைச்சர் ஆன பிறகு இந்தியர் மனதில் ஆந்திர மாநிலத்தின் மதிப்பு உயர்ந்துள்ளது அல்லவா?

! அதில் சந்தேகத்துக்கு இடமில்லை. ஆந்திர முதலமைச்சர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் சென்னைக்குக் கிருஷ்ணா நதி நீர் தருவதாகச் சொல்லிக் கொண்டிருந்தார்களே தவிர காரியாம்சத்தில் நிறைவேற்றியவர் என். டி. ஆர். தான். மாநிலத்தின் சில இடங்களில் மக்கள் அருவருக்கத் தக்கவிதத்தில் நடந்து கொண்டதைப் பார்த்துத் துறவறக் கோலம் பூண்டது சினிமா வேஷமல்ல. மனப் பூர்வமான வருத்தத்தின் விளைவு. ஜனகர் இப்படி அரச பதவியில் பற்றற்று ஆண்டதாகக் கூறுவார்கள். பற்றுதல் இருக்குமானால் கட்சிக்குள்சிலர் கோஷ்டி சேர்க்க ஆரம்பித்த போது கட்சியையே கலைத்து விடுவதாகக் கூறுவாரா? இப்போக்கெல்லாம் மக்களிடம் ஒரு ஆரோக்கியமான பாதிப்பை உண்டாக்கவே செய்யும்.

# கேட்டவை

ஆர் சந்திரசேகரன், லால்குடி

? குழந்தைவேலு பேசியதை அவைக் குறிப்பிலிருந்து நீக்கிய அவைத் தலைவர் ராசாராமின் நடுநிலைமையைப் பாராட்டலாம் அல்லவா?

! தாராளமாக. யாருக்கும் எதற்கும் அஞ்சாமல் சத்தியத்துக்கு மட்டுமே கட்டுப்பட்டுத் தராசை விடவும் துல்லியமாகப் பிரச்னையை எடை போட்டு அவையின் கௌரவத்தைக் காத்திருக்கிறார்.

ஏ.கே.நாசர், லெட்சமாங்குடி

? தங்களைக் கவர்ந்த சிறுகதை எழுத்தாளர் யாரென்று கூற முடியுமா?

! குழந்தைவேலு தான். கருணாநிதி தம் மகன் பெயரில் நூறு ஏக்கர் நிலம் வாங்கியிருக்கிறார் என்பதை அமைச்சர் நிரூபிக்க முயன்று தோல்வியுற்றாலும் இதற்காக அவர் எவ்வளவு கஷ்டப்பட்டு அருமையான கதை ஜோடித்திருக்கிறார் என்பதைப் பார்க்கும்போது பிரமிப்பாயிருக்கிறது.

க. பி. கந்தையா, பசுமலை.

? தற்போது தங்களை கண் கலங்கச் செய்த நிகழ்ச்சி?

! சாதாரணமாகவே நான் எதற்கும் அசையாத கல் நெஞ்சன் என்று பெயர் வாங்கியவன். ஆனால் என்னவோ தெரியவில்லை, காந்தி படம் பார்க்கும் போது என்னையறியாமல் கண்களிலிருந்து நீர் பெருகிக் கன்னங்களில் வழிந்து கொண்டிருந்தது. அதை உணர்ந்த போது எனக்கே ஆச்சரியம். வடிந்த கண்ணீர் அன்றையத் தலைவர்கள்பட்ட துன்பங்களைக் கருதியா அல்லது அவ்வளவு கஷ்டத்துக்குப் பிறகு பெற்ற சுதந்திரத்தின் இன்றைய நிலையை எண்ணியா? — எனக்கே புரியவில்லை.

க. இளங்கோ, பாண்டமங்கலம்.

? ஜெயலலிதாவுக்குத் தபால் தலை வெளியிடுவார்களா?

! எம். ஜி. ஆர். முன்பு தாம் அறிவித்ததுபோல் தபால் கார்டு கவர்களின் விலையைக் குறைக்கும் போது நிச்சயம் ஜெயலலிதாவுக்குத் தபால் தலை உண்டு.

வி. ஸ்ரீதர், சென்னை-15.

? மாணவனுகிய நான் கோடை விடுமுறையை உருப்படியாக எப்படிக் கழிக்கலாம்?

! ஒரு கைத்தொழில் கற்றுக் கொள்ளுங்கள். தச்சு, பிளம்பிங், எலக்டிரிகல், டெய்லரிங் ஏதேனும் ஒன்று. உங்கள் குடும்பத் தகுதிக்குக் குறைவான தொழிலாயிருந்தால் ரொம்ப நல்லது.

எஸ். அன்புமணி, ஈரோடு.

? யார் மீது அனுதாபப்படுகிறீர்கள்?

! டிசம்பர் சீசனில் சென்னையில் 206 இசை—நடன நிகழ்ச்சிகள் நடைபெற்றாலும் இவற்றில் வாத்திய வித்வான்களுக்கு ஒதுக்கப்பட்டவை 46 தான் என்றும், இதிலும் வீணை வித்வான்களுக்குக் கிட்டிய வாய்ப்பு 16 மட்டுமே என்றும் புள்ளி விவரம் தந்த வீணை எஸ்.பாலசந்தர் நம் அனுதாபத்துக்கு நிச்சயம் உரியவராகிறார்.

எஸ். கே., சேலம்.

? தராசு படபடவென்று பொரிந்து தள்ள விரும்பும் சில அரசியல் கொட்டங்கள்?

! அடுக்கிக் கொண்டே போகாமல் சமீபத்திய இரு செய்திகளுடன் நிறுத்திக் கொள்கிறேன். (1) உப தேர்தலில் தம் மனைவி ஜெயந்தி ஜெயிக்க வேண்டும் என்பதற்காக ஒரிஸ்ஸா முதல்வர் பட்நாயக் 1981—ல் மக்களின் வரிப் பணத்தை ஏராளமாய்ச் செலவிட்டு, தலைநகர் கட்டாக்குக்கு அவசரம் அவசரமாக வாரி வாரியாக எண்ணெய் தருவித்து மார்க்கெட்டில் எண்ணெய் விலை சரிய வழி வகுத்தார் என்பது இப்போது அம்பலமாகியுள்ளது. (2) எக்ஸ்ரே ஃபிலிம்களை மொத்தமாக அயல் நாட்டிலிருந்து தருவித்து சில்லறையாக 'பாக்' செய்து வினியோகிக்கும் ஏகபோக (93 சதம்) உரிமை ஹிந்துஸ்தான் ஃபோட்டோ ஃபிலிம் என்னும் அரசு நிறு


அனுதாபம்


ராஜிநாமா?


தபால்தலை!


சூதாட்டம் மட்டுமல்ல!

ளத்திடம் தான் உள்ளது. எனினும் பொது மக்களுக்கு எட்டாத அளவில் விலை ஏற்றம் செய்வதுடன் அடிக்கடி எக்ஸ்ரே ஃபிலிமுக்கு பஞ்சமும் ஏற்படுத்தி வருகிறது. இந்த லட்சணத்தில் மேற்கு ஆசிய நாடுகளுக்கு எக்ஸ்ரே ஃபிலிம் ஏற்றுமதி செய்கிறதாம் இந்த அரசு நிறுவனம். ஏழைப்பங்காளன் அரசு எப்படி எப்படி செயல்படுகிறது பார்த்தீர்களல்லவா?

**?** பத்மா தேசிகன், பங்களூர். துக்ளக் இதழில் பிரபல எழுத்தாளர்களைத் துர்வாசர் சாடியிருப்பது பற்றி கமெண்ட்ஸ் ப்ளீஸ்!

**!** ஏற்கெனவே நான் கூறியிருப்பதையே திரும்பச் சொல்ல வேண்டியிருக்கிறது. துர்வாசர் முதலில் பத்திரிகை ஆசிரியர்களைத் தான் கோபிக்க வேண்டும். அவர்கள் விருப்பத்துக்கு ஏற்பத்தான் எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். தும்பை விட்டு விட்டு வாலைப் பிடித்து என்ன பயன்? எழுத்தாளர்களைச் சாக்கடையை விட்டு வெளியேற பத்திரிகை ஆசிரியர்கள் அனுமதிப்பதில்லை. அது சரி, ஆபாசம் பற்றிய துக்ளக் சர்ச்சையே ஆபாசமாகி விட்டதே!

**?** மஞ்சுகதேவன், சென்னை-17. கிண்டி குதிரைப் பந்தய மைதானத்தின் அருகில் இருக்கிறீர்களே? ஒரு முறையாவது பந்தயத்தில் ஓடும் குதிரைகளைப் பார்த்திருக்கிறீர்களா?

**!** ஒரு முறையாவது? நான் காரியாலயத்தில் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து ஒவ்வொரு குதிரை ரேஸையும் பார்க்காமல் இருக்கவே முடியாது! குதிரை ஓடுவதை மட்டுமல்ல; சிலசமயம் கால் சறுக்கி விழுவதையும் இருதயத் தாக்குதலால் சரிவதையும் பார்த்திருக்கிறேன். அப்படி குற்றுயிரும் கொலையுயிருமாய் விழுந்த குதிரைகளைச் சுட்டுக் கொல்வதையும் கண்டிருக்கிறேன்! சூதாட்டம் என்பதற்காக மட்டுமின்றிப் பிராணி வதை என்பதற்காகவும் குதிரைப் பந்தயங்கள் தடை செய்யப்பட வேண்டும்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:-

கோ. வி. திருநாயகன்,
12, பூந்தோட்டம், வள்ளலார் தெரு, பூதாமூர் அஞ்சல்
விருத்தாசலம் (வட்டம்)·
606 003.



வெளிப்புறப் படிப்பிடிப்புக்குத் திருச்சி வந்த எஸ். வி. சேகர் தங்கியது - ஹோட்டல் ஜெயந்தி! அதன் ஸ்வீட் ஸ்டாலைப் பார்த்ததும் நாக்கில் உமிழ்நீர் உற்பத்தியாக ''ஸ்வீட் என்ன விலை சார்?'' என்று கேட்டபடி நெருங்கியவர்... நான் கொஞ்சம் ஹெல்ப் பண்ணவா!'' என்று சுவாரஸ்யமாக வியாபாரத்தில் இறங்கிவிட்டார். அவரைப் பார்த்ததும் அடையாளம் புரிந்துகொண்டு நிறைய ரசிகர்கள் கூடிவிட்டனர். ஆள் ஆளுக்கு 'ஆட்டோகிராப்' கேட்டு நோட்டை, பேப்பரை நீட்டியதும் சிரித்தபடி (''எத்தனை கிலோ வேணும்?'') போட்டுக் கொடுக்க ஆரம்பித்தார்.

-சாருப்ரபா சுந்தர்

புகைப்படம் : பிரசன்னு-பாபு



கருத்து : அ. குமார்

# பொது அறிவுப் பக்கம்



✠ புவனா, ரூபி
(ஹோலி கிராஸ் கல்லூரி)

இடம்: திருச்சி
பங்கேற்றோர்: இ. ரவிச்சந்திரன்
கே. சுரேஷ்குமார்
(நேஷனல் கல்லூரி)

நேஷனல் கல்லூரி மாணவர்கள் ரவியும் சுரேஷும் கேட்ட கேள்விகள்:

1. சூரிய ஒளி சூரியனிலிருந்து புறப்பட்டுப் பூமியை வந்தடைய எவ்வளவு நேரமாகும்?
2. வீரமா முனிவரின் இயற் பெயர் என்ன?
3. பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்ள ஒரு நாளும், ஒரு தடவை சூரியனைச் சுற்றிவர 365 நாட்களும் ஆகிறது. ஆனால் ஒரு கிரகம் தன்னைத் தானே ஒரு முறை சுற்றிக்கொள்ள எடுத்துக் கொள்ள ஆகும் நேரம், சூரியனைச் சுற்றிவர ஆகும் நேரத்தை விட அதிகம். அது எந்த கிரகம்?
4. நாஸ்திகன் என்ற பெயர் எப்படி வந்தது?
5. எந்த நாட்டின் தேசிய கீதம் மிகச் சிறியது?
6. 'கொடி நாள்' எப்போது கொண்டாடப் படுகிறது?
7. 'சேது எக்ஸ்பிரஸ்' எங்கிருந்து எங்கு செல்கிறது?

## கிரிக்கெட் மாட்சில் பந்து தொலைந்து போனால்...

புவனா
ரூபி
(ஹோலிகிராஸ் கல்லூரி)

ஹோலிகிராஸ் கல்லூரி மாணவிகள் புவனாவும் ரூபியும் கேட்ட கேள்விகள்:

1. கிரிக்கெட் மாட்சின்போது பந்து தொலைந்துபோனால் ரன் உண்டா? எத்தனை?
2. மிக அதிகத் தடவை ஆஸ்கார் விருது வாங்கியவர் யார்?
3. அமாவாசையன்று சந்திரனைக் காண-முடியுமா?
4. சமீபத்தில் விண்வெளியில் நிகழ்த்தப் பட்ட சாதனை என்ன?
5. இந்தியாவில் வழங்கப்படும்மிக உயர்ந்த விருது எது? இந்த வருடம் அது யாருக்குத் தரப்பட்டது?
6. டாக்டர்கள் தரும் மருந்துச் சீட்டுக் களில் R என்று போடப்பட்டுள்ளதே, இதன் பொருள் என்ன?
7. கண்ணதாசன் தமிழகத்தின் அரசவைக் கவிஞராய் இருந்தது தெரியும். அதற்கு முன் யாராவது அந்தப் பதவி வகித் திருக்கிறார்களா? யார்?

ஹோலி கிராஸ் மாணவிகளின் வினாக் களுக்குச் சரியான விடைகள் வருமாறு:

1. உண்டு; 6 ரன்கள்.
2. வால்ட் டிஸ்னி. 35 தடவை.

✠ திருச்சி ரோட்டரி கிளப் முன்னாள் தலைவர் திரு. ஜுலி வெற்றிபெற்ற தேசிய கல்லூரி மாணவர் களுக்குப் பரிசளிக்கிறார்.



3. முடியும். ஆனால் அன்றைக்கு சூரிய கிரகணமாக இருக்க வேண்டும். சூரியனைச் சந்திரன் மறைத்துக் கிரகணம் ஏற்படுத்தும். நாம் சந்திரனைப் பார்க்கலாம்.

4. முஸ்கிரேவ், டொனால்ட் பீட்டர்சன் என்ற இரு அமெரிக்க விண்வெளி வீரர்கள் விண்வெளியில் நாலு மணி நேரம் நடந்து சாதனை புரிந்துள்ளனர்.

5. பாரத ரத்னா. இந்த வருடம் அமரர் வினோபாஜிக்கு.

6. R என்பது Recipe என்ற லத்தீன் வார்த்தையின் சுருக்கம். இதற்கு எடுத்துக்கொள் என்று பொருள்.

7. ஆம். நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை.

நேஷனல் கல்லூரி மாணவர்களின் வினாக்களுக்குச் சரியான விடைகள்:

1. 8 நிமிஷம் 19 வினாடிகள்.

2. ஜோஸப் பெஸ்கி.

3. வீனஸ்.

4. 'நாஸ்தி' என்ற சம்ஸ்கிருத சொல்லுக்கு 'இல்லை' என்று பொருள். 'கடவுள் இல்லை' என்பவனுக்கு 'நாஸ்திகன்' என்று பெயர் வந்தது.

5. ஜப்பானிய தேசிய கீதம் – 4 வரிகள் கொண்டது.

6. டிசம்பர் 7ந் தேதி

7. சென்னை எழும்பூரிலிருந்து ராமேஸ்வரத்துக்கு.

இந்த 'க்விஸ்'ஸில்

ஹோலிகிராஸ் பெற்ற பாயிண்ட்கள் 6

நேஷனல் கல்லூரி பெற்ற பாயிண்ட்கள் 8

வெற்றி பெற்ற நேஷனல் கல்லூரி மாணவர்களுக்குத் திருச்சியின் முன்னாள் ரோட்டரி சங்கத் தலைவரும், தொழிலதிபருமான திரு ஏ. ஜூலி கல்கி சார்பில் ரொக்கப் பரிசையும் புத்தகப் பரிசையும் வழங்கினார்.

நன்றி: க்விஸ் நிகழ்ச்சிக்கு ஸ்கோரராய் இருந்து உதவின நேஷனல் கல்லூரி திரு சங்கரன் அவர்களுக்கு.

ஏற்பாடு, தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி ப்ரியன்**

புகைப்படம்: **திருச்சி சம்பத்**




- டில்லி டி.வி.யில் வாரம் இரண்டு இந்திப் படம், மூன்று ஒலியும் ஒளியும், ஒரு பிரதேச மொழிப் படம் என்று காட்டுகிறார்கள். ஃபாதர் டியர் பாதர் (இங்கிலாந்து), லூஸி ஷோ (அமெரிக்கா), அனிமல் கிங்டம் (பிரான்சு), டெலி மாட்ச் (மேற்கு ஜெர்மனி) ஆகிய தொடர் காட்சிகளும் காட்டப்படுகின்றன. டில்லி தூர்தர்ஷன் பாப்புலராகி விட்டது!

- ரஜனியின் முதல் இந்திப் படம் 'அந்தா கானூன்' (குருட்டுச் சட்டம்) ரிலீஸ் ஆகிவிட்டது. தியேட்டரில் எக்கச்சக்கக் கூட்டம். டிக்கட்டுகள் கறுப்பில் போகிறது. (சட்டம் குருடுதான் என்பது தியேட்டருக்கு வெளியிலும் உறுதிப்படுத்துகிறார்களோ!)

- கன்னட நடிகர் ராஜ்குமாரின் உண்மைப் பெயர் எஸ். பி. முத்துராஜா. பத்மபூஷண் விருது பெற டில்லிக்கு வந்திருந்தார். கர்நாடக சங்கத்தினர் ஒரு வரவேற்பு நிகழ்ச்சி நடத்தினர். கூட்டம் சுமார்தான்.

- மாருதி காருக்கு புக்கிங் துவங்கிவிட்டது. 'ஃபாரம்' விலை 10 ரூபாய். முதல் நாள் புதுதில்லி ஸ்டேட் பாங்கில் மட்டும் சுமார் பத்தாயிரம் பாரங்கள் விற்பனை ஆயினவாம். ஃபாரத்திலேயே நல்ல லாபம். டெபாஸிட் அப்ளிகேஷனோடு ரூ. 10,000. கொள்ளை!

**பி. எஸ். ஆர்.**













# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





தயாரிப்பாளர்:
**பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்**
..போர்ட், பம்பாய்-400 023. ..போன்: 273831

everest/83/BCL/85-tm

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: சாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32450 & 32886

## அத்தியாயம் 16

"கதை சொல்றது ஆதிகாலத்துப்பழக்கம். எப்ப மொழின்னு ஒண்ணு வந்ததோ அது உடனே கதை சொல்லத்தான் ஆரம்பிச்சிருக்கும். இன்னிக்குக் கார்த்தால என்ன நடந்தது தெரியுமான்னு கதை பேச ஆரம்பிச்சிருக்கும். கார்த்தாலே நடந்ததுக்கும் இப்பச் சொல்ற கதைக்கும் வித்தியாசம் நெறைய இருக்கும். கார்த்தால அது ஏன் நடந்ததுன்னுன்னு ஒரு ஆராய்ச்சி யோட செய்தி துவங்கும். விஷயம் நடக்கிறபோது ஆராய்ச்சி வரலே. அப்புறம் வரது. விஷயம் நல்லதோ கெட்டதோ ஒரு அலசல் செய்யத் தோணறது. ரீகலெக்ஷன் ஆஃப் தாட்ஸ், மனுஷாளுடைய பெரிய சொத்து இது. நடந்ததை நினைவுக்குக் கொண்டு வந்து, யோசனைபண்ணைத் தன்னைப் பக்குவப்படுத்திக்கறது மனுஷாளுக்கு மட்டுமே உண்டு. மிருகம் மாதிரி சட்டென்று கோபமோ, காமமோ வந்துடறதில்லே. வாலே மிதிச்சவுடனே பாய்ஞ்சுடறதில்லே. கோபப்பட்டா என்னாகும்னு நம்மாலே யோசிக்க முடியும். தொடர்ந்து யோசிக்கிறவன் ஞானி. முடியாதவன் மிருகம். யோசனை பண்ணினதின் விளைவு இன்றைய வாழ்க்கை, வளர்ச்சி.

"யோசனை பண்ணியும் வேதனை போகலேயே, குழப்பம் தீரலேயென்னு கோபம் வரும். படர்ந்து வர வர கொடிக்குத்தான் ப்ராப்ளம். பாறுங்கல்லுக்குப் பிரச்னை இல்லே. அன்னிலேருந்து இன்னி வரைக்கும் மிருகத்துக்குப் பசிதான் பிரச்னை. நமக்கு ஆயிரம்.

"இது ஏன்?" நாணு சாரே கேள்வி கேட்டுக் கொண்டார்.

"வளர்ச்சின்னு இடைஞ்சல் உண்டு. இடைஞ்சலைத் தாண்டறதுதான் வளர்ச்சி.

"இனி வளர்ச்சியையும் நிறுத்த முடியாது. இடைஞ்சலையும் ஒதுக்க முடியாது. பூமியை விட்டுப் புத்திங்கிற இறக்கையை விரிச்சுப் பறக்க ஆரம்பிச்சாச்சு. இனி புத்தி இறக்கையை மடிச்சுகோன்னு முடியுமோ. முட்டி மோதி மொத்த மனுஷ குலமும் செத்துப் போகும். தொடர்ந்து பறக்கத்தான் வேணும்.

"கதை எழுதறது யோசிக்கிறதனுடைய பலன். இன்னிக்குப் பிரச்னையை முழுசா முனை உடையாம யோசிக்கிறவன் அதை எழுத முயற்சிசெய்யலாம். பாட்டாப் பாடலாம். வரையலாம்; டான்ஸ் ஆடலாம். எல்லோரும் பாட முடியுமா எழுத முடியுமா? வேரா சிலது வரும். இலையா சிலது நிக்கும். இலையா பத்து, பூவா நாலு, பழமா ஒண்ணு. கிளையால இலே. இலையால பூ. பூவால பழம். பழத்தால விதை, விதையால வேர். அற்புதமான ப்ராஸஸ் இது. சகலமும் முக்கியம். ஒரு விஷயத்தின் உதவி மற்றதுக்கெல்லாம் வேணும்.

"நான் எழுதறது, எழுதினது ஒரு பெரிய ப்ராஸஸ்ல ஒரு சிறிய செயல்ங்கற நினைப் போடதான். எல்லோர்க்கும் பயன்படணும்னுதான்.

"என் அனுபவம் என் கதை. என் கதையைப் படிச்சு என் அனுபவம் உனக்கும் அனுபவமாறபோது என் வயசும் உன் வயசும் சேர்ந்து முப்பது வயசுக்கு அறுபது வயசுப் பக்குவம் வந்துடும். வரலாம் இல்லையா. ஏன் எழுதறேன்னு கேட்டியே அதுக்கு இதுதான் பதில்." நாணு ஐயர் வாயைத் துடைத்துக் கொண்டார். காப்பி ஆறிக் கொண்டிருந்தது.

விஸ்வநாதன் பிரமித்துப் போயிருந்தான்.

இந்தக் கிழவன் லாரி கம்பெனி க்ளார்க்கா, தமிழ் வாத்தியாரா. தன்னுள் இவ்வளவு அடக்கி வைத்துக் கொண்டு அமிர்தமாய்ப் பொழிகிறதே. ஞானம் பொறி பறக்கப்

# இரும்பு குதிரைகள்

### பாலகுமாரன்



பேசுகிறதே. இந்த வயதில் இத்தனை புத்தி கூர்மையை அனுபவச் செழிப்பை வைத்துக் கொண்டு இது ஏன் வாரிக்கம்பெனிக்ளார்க்காக வந்தது. ஏன் தமிழ் வாத்தியாராய் உழன்றது. ஏன் ஞானம் இறைப்பதையே, எழுதுவதையே தொழிலாய்க் கொள்ளாமல் போயிற்று.

மனத்தில் தோன்றியதை விஸ்வநாதன் கேள்வியாக்கிறான்.

''ஞானத்துக்கும் தொழிலுக்கும் என்னப்பா சம்பந்தம்? இரை தேடறது நமக்கும் உண்டே. புத்தியை வயத்தாலே கட்டிப் போட்டிருக்கே. ஒரு நாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்ன்னு ஒளவைக் கிழவி டாடறாளே. இரை தேட வேண்டாம்னு பாறாங்கல்லாய்ப் போயிடுவோம். பாறைக்குப் பிரச்னை இல்லை. மிருகம் மாதிரி இரை மட்டும் தேடற சுபாவமும் இல்லை. இரையும் தேடி ஞானமும் தேடி... அடடா! என்ன சுகம், எப்படிப்பட்ட போராட்டம்! இது பனிஷ்மெண்ட் இல்லை அம்பி. சுயமா படம் போட்டுக்கற வித்தை. சுவாரஸ்யமான விளையாட்டு.



மிருகத்துக்குண்டான பசியும் வச்சு ஞானமும் கொடுத்திருக்கு மனுஷனுக்கு.

''நாக்குட்டியை நிலைக்கண்ணாடி முன்னாடி வச்சா என்ன பண்ணும்? நக்கிப்பார்த்துட்டுத் திங்க முடியலைன்னு போயிடும். மனுஷன் நின்னு அடடே நான் இவ்வளவு அழகான்னு யோசிப்பான். தன் இருப்பும் தெரிந்து எதிர்ப்பக்கம் போய்த் தன்னையே பாத்துக்கற சுபாவம் வர்றது. நாக்குட்டிக்கு இருப்பு மட்டும்தான் முக்கியம். மனுஷனுக்கு இருப்பும் தொலைவும் உண்டு. தொலைவுப் பார்வை இருக்கிறதாலே வீடும் அரிசி சேமிப்பும் வர்றது. இதற்குண்டான பிரச்னையும் வளர்ந்துடறது. படருவதால், வளர்வதால் வரும் பிரச்னை. படர்ந்த இடம் மரமோ முள்ளுச் செடியோ மலையோ தரையோ அந்தந்தச் சூழ்நிலைப் பிரச்னை.''

''நாம வளர்ந்திருக்கோமா சார்?''

''நிச்சயம். அற்புதமாய் வளர்ந்திருக்கோம்.''

காந்திலால் கனைத்தான்.

நாணு ஐயர் அவனைப் பார்த்துவிட்டுத் தலையசைத்தார்.

''சரி, இது பேசினோம்னு முடிவே இல்லை. இன்னொரு நாள் வச்சுப்போம். வந்த விஷயம் என்னன்னு...''

''அந்தத் திருப்பதி லாரி விஷயமாவா'' விஸ்வநாதன் சட்டென்று கீழிறங்கினான்.

நாணு ஐயர் மெல்லப் புன்னகை செய்தார். பய கெட்டிக்காரன். டக்குன்னு தரைக்கு வந்துட்டான்.

காந்திலால் கைகூப்பினான். ''ஆபீஸ்ல பில் பாஸ் பண்ண மாட்டேங்கறாங்கோ சார். இனி லோடும் கிடையாதுன்னு பேசறாங்கோ. தவறு எங்கியும் நடக்கும். பத்து ட்ரிப்புல ஒண்ணு ஸ்லிப் ஆவும்.''

''நான் என்ன செய்யணும் காந்திலால்?''

''வேணும்னுட்டுச் செய்யலை சார். நடந்து போச்சு. வண்டி பிரேக் டவுன் பற்றி யாரும் சொல்ல முடியாது. எதிர்பார்த்து நடக்கறது இல்லை.''

''எங்க அவசரம் எங்களுக்கு.''

''இல்லேன்னு சொல்லலை சாமி. நான் வேணும்னுட்டுச் செஞ்ச மாதிரி சொல்றாங்கோ.''

''ஏன் அந்த லோடுக்கு பில் அனுப்பிச்சே''

''முட்டாள்தனம்தான். எல்லாத்துக்கும் பில் போடற மாதிரி போட்டுட்டாங்க. பில் பணம் வாணும். இனி வியாபாரமே இல்லேன்னு எப்டி சாமி.''

''எங்கிட்டப் பேசி என்ன புண்ணியம்? நானு உன் லாரி எங்கேஜ் பண்றேன்.''

''இல்லே சாமி. அது நான் பார்த்துக்கறேன். வண்டில போய் லாரி மாத்தி எடுத்து வந்ததைப் பெரிசு பண்ணும நாணும் கோவாப்ரேட் பண்ணினதை எடுத்துச் சொல்லணும். இந்த லோடுக்கு மட்டும் டெலிபோன் கால் இருநூறு ரூபாய் ஆய்ட்டிருக்கும். நானும் சும்மா இல்லை விசு சார்.''

''புரியறது. இன்டைரக்டா உன்னை சப்போர்ட் பண்ணச் சொல்றே.''

காந்திலால் பேசாமலிருந்தான்.

''அது இல்லை. தப்பு இவர்தான் பண்ணினார்னு இதுல சொல்ல முடியாது. போறுத காலம் இவர் மாட்டிண்டு பதில் சொல்ல வேண்டியிருக்கு.'' நாணு ஐயர் மெல்ல இழுத்தார்.

''சரி, என்னால இடைஞ்சல் வராது. ஆனா அன்னிக்கு நான் பட்ட கஷ்டம், தவிப்பு சாதாரணமில்லை காந்திலால். அதை விடப் பெரிய தவிப்பு வீட்ல சொல்லாமல் போய் இவகிட்ட வாங்கிக் கட்டிண்டது. இந்த அவஸ்தை எனக்குத் தேவையேயில்லை.''

நாணு சார் சட்டென்று விஸ்வநாதனை உற்றுப் பார்த்தார். விசு விழிகளைத் தாழ்த்திக்கொண்டான்.

'ஓ... உனக்கு வீடு சரியில்லையோ. பிணக்கு நிறைந்த வாழ்க்கையோ அதுதான் இலக்கியம் தேடி அலைகிறயோ?' நாணு சார் மனசுள் கணக்குப் போட்டார்.

இது ஸ்லிப். இவர் எதிரே இதைச் சொல்லியிருக்கக் கூடாது. விஸ்வநாதன் மெல்ல மறுகினான்.

''அடாடா அது ஹிம்சைன்னு அவளுக்கும் ஹிம்சை. உங்களுக்கும் வேதனை. வெளியே போன புருஷன் வரலைன்னு பொம்மனாட்டி நிச்சயம் தவிக்கத்தான் செய்வா.''

''தவிப்பா'' — படியருகே நின்றிருந்த தாரிணி முன்னேறினாள். ''வயிறே கலங்கிப் போறது. மாமா, நண்டும் சிண்டுமாக் குழந்தைகளை வச்சிண்டிருக்கேன். ஆறு மணிக்குத் தகவல் இல்லேன்னா என்னமோ, ஏதோன்னு பதர்றது மனசு.''

''வாஸ்தவம், வாஸ்தவம்.''

''இவரா — லேட்டா எடுத்துக்கறார். வீட்டுக்கு வந்தா மட்டும் என்ன, சதா படிப்பு... பொயட்ரி. வீடு மொத்தமும் நான் கட்டித் தாக்க வேண்டியிருக்கு.''

''அடடா.. சிரமம்தான். ஆனா தாயே... நூத்துல ஒருத்தன்தான் எழுதறான். உன் புருஷன் சாதாரணமா எனக்குப்படலேம்மா.''



அவர்: ''உங்க மனைவியோட தம்பி வந்துட்டுப் போயிருக்கிறதா சொல்றீங்களே எப்படி?''

இவர்: ''ஆஷ் ட்ரேயில் இரண்டு சிகரெட் துண்டு காணமே..!''

—சத்தி கமலேஸ்வரன்

''அசாதாரணம்தான். ஆனா யார் மெச்சிக்கிறா? ஆபீஸ் பொயட்ரியைப் பாராட்டறதா பாராட்டறமாதிரி நாலுபுஸ்தகத்தில வர்றதா எழுதிஎழுதிதானேவச்சுக்க வேண்டியது. வெறும் குதிரைக் கவிதையா எழுதறார். எனக்கே ஒண்ணும் புரியலே.''

''அது என்ன குதிரைக் கவிதை?''

''என்னமோடைரிமுழுக்கநாப்பது அம்பது எழுதி வச்சிருக்கார். ஒண்ணும் புரியலே.''

விஸ்வநாதன் வேதனையுடன் முகத்தைத் துடைத்துக் கொண்டான். அவள் விமர்சனம் வலியளித்தது. மனைவியே சவுக்கால் பிறர் முன் சொடுக்குவது இழிவாகப் பட்டது. ச்சீ.. உள்ளே போ என்று சீறலாம். ஆனால் அது மேலும் இழிவாகும்.

''விஸ்வநாதன், அந்தக் குதிரைக் கவிதை சொல்லுங்கோ கேக்கலாம்.'' நாணு ஐயர் குனிந்து கொண்டார். வந்த காரியம் முடிந்து விட்டது. கவிதை கேட்டால் என்ன தப்பு.

'இத்தனை விஷம் கூடாதுன்னு உங்களுக்கு' என்று தாரிணியின் கீச்சுக்குரல் மறுபடி காதில் மோதிற்று. குதிரைக்கு விஷமுண்டோ என்ற கேள்வி ஞாபகம் வந்தது. எதெதுக்கு விஷம் உண்டு. எவை கொம்பு உடையவை என்று கேள்வி வந்தது. அன்று எழுதிய கவிதை ஞாபகம் வந்தது.

தொண்டையைச் செருமிக் கொண்டான்.

அவல ஆடுகள்கூட இங்கே
கொம்புடன் ஜனித்ததாக
கீச்சுப் பூனைகள் கொண்டதிங்கே
கூரிய நகமும் பல்லும்
யாருக்கும் தீங்கு செய்யா நத்தைக்கும்
கல்லாய் ஓடு.
பச்சோந்தி நிறத்தை மாற்றும்
பல்லிவால் விஷத்தைத் தேக்கும்
குதிரைகள் மட்டுமின்றி இங்கே
கொம்பின்றிப் பிறந்ததென்ன
வெறுப்புடன் பிறந்த மாக்கள்
பயத்தினைத் துணையாய்க் கொள்ள
விருப்புடன் பிறந்த குதிரை
கொம்பில்லை விஷமுமில்லை.
தர்மத்தைச் சொல்ல வந்தோர்
தடியோடா காட்சி தருவர்
குதிரைகள் காதைப் பாரும்
உள்ளங்கை சிவப்பு தோற்கும்
இது குதிரைகள் எனக்குச் சொன்ன
வேதத்தின் ஏழாம் பாடம்.

''சபாஷ். அற்புதம். தர்மத்தைச் சொல்ல வந்தோர் தடியோடா காட்சி தருவர். ரொம்பப் பிரமாதம். நான் என்னவோ நினைச்சேன். எனக்குப் புரியறது விஸ்வநாதன். கவிதை உங்களுக்கு நெஞ்சிலேர்ந்து வர்றது. எனக்கு மொத்தமும் புரியறது. அடாடா விருப்புடன் பிறந்த குதிரை கொம்பில்லை விஷமுமில்லை. இத்தனை நேரம் பேசிய விஷயம் ஐயா இது. பூமில பிடிப்பு இருந்தா காதல் இருந்தாபயம் எப்படி வரும்? பயமில்லைன்னா விஷம் எதுக்கு, கொம்பு எதுக்கு. கரெக்ட். வாழ்க்கையை நேசிக்கணும். நேசிக்கிறவாளுக்குத்தான் உலகம். அடடா அடாடா.''



**பணம் குவிக்கும் படம்!**

காந்தி படத்துக்கு எட்டு ஆஸ்கார் பரிசுகள்; அடுத்ததாக நாலு ஆஸ்கார் பரிசுகளைத் தட்டிக் கொண்டு போனது E. T. என்ற படம். விண்வெளியில் வேறு ஒரு உலகிலிருந்து இங்கு வந்து சேர்ந்துவிட்ட ஒரு விருந்தினரையும் அவரை நண்பராக்கிக் கொண்ட ஒரு பையனையும் பற்றிய கதை. 1982 மத்தியில் திரையிடப்பட்ட E. T. முதல் ஆறு மாதத்தில் 300 மிலியன் டாலர் சம்பாதித்தது! அது சரி E. T. என்றால்? Extra Terrestrical. இந்த உலகுக்குவெளியேஇருந்துவந்த (வன்)து என்று பொருள்.

---

விஸ்வநாதன் அசையாது உட்கார்ந்திருந்தான்.

நாணு ஐயர் அவன் தோள் மீது கை வைத்தார். உற்றுப் பார்த்தார். – நானிருக்கிறேன் என்பது மாதிரி மெல்லப் புன்னகை செய்தார். விஸ்வநாதனும் அந்தப் புன்சிரிப்பை வாங்கி மெல்ல எதிரொலித்தான்.

''எனக்குப் பரம சந்தோஷம் விஸ்வநாதன். வெறும நான் வியாபாரம் பேசலைன்னு ரொம்பச் சந்தோஷம். நாம அடிக்கடி சந்திக்கணும்.''

எழுந்து கை கூப்பினார்.

காந்திலால் கைகுலுக்கினான்.

விஸ்வநாதன் தாரிணியோடு நடந்து வாசல்வரை வந்து வழியனுப்பினான். கார் நகர்ந்ததும் தோள் பக்கம் தாரிணி கிசுகிசுத்தாள். ''இந்தக் கவிதை என்கிட்டச் சொல்லவே யில்லையே இது நன்னாயிருக்குன்னு.''

விஸ்வநாதன் சிறிது ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தான்.

''கலைமகளுக்கு அனுப்பிப் பாருங்கோ. போடுவாளான்னு. போட்டாலும்போடுவா''

உள்ளே திரும்பினான்.

எதிரே மின்வண்டி தடதடத்துக் கடந்தது.

விஸ்வநாதன் வெகு நேரம் இணையாமல் நெடுந் தொலைவு போகும் தண்டவாளங்களையே வெறித்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)





எச்சரிக்கை! நாய்களுடன் விளையாடுவதிலும் ஆபத்து உண்டு!

கல்கி 10.4.83 இதழில் வெளியான ''டாக்டர் கேட்ட கேள்வி – தம்பி உன் நாய்க்குட்டியின் பெயரென்ன?'' என்ற கட்டுரை மிகவும் பயனுள்ளது.

இதுபற்றிக் கால்நடை மருத்துவத்தில் 33 ஆண்டுகள் அனுபவமுள்ள எனது வேண்டுகோளைப் பொது மக்களின் பயனுக்காகத் தங்களின் பத்திரிகையில் வெளியிட்டு உதவ அன்புடன் கோருகிறேன்.

நாய்களின் குடலில் சுமார் 2.5–9மில்லி மீட்டர் நீளமுள்ள ஒருசிறுபட்டைப்புழு எகுனோகாகஸ்கிரானுலோகஸ் (Echinococcus granulosus) ஆகும். இதன் முட்டைகள், நாயின் மலத்துடன் வெளியாகிப் பூமியை வந்தடைகின்றன. மாடு, ஆடு முதலிய மிருகங்கள் தரையில் முளைத்துள்ள புல்லை மேயும்போது இப்புழுவின் முட்டைகள் அவைகளின் குடலை அடைந்து, பிறகு அவைகளின் ஈரல், நுரையீரல் பகுதிகளை அடைந்து நீருள்ள பலூன் போல் வளருகின்றன. இந்த பலூன் போன்ற பைகளுக்கு ''ஹைடாடிட் சிஸ்ட் (Hydatid Cyst) என்று பெயர். இவைகள் 5–10 சென்டிமீட்டர் விட்டமுள்ளதாக இருக்கும். இந்த ஹைடாடிட் சிஸ்டுகளை நாய், பூனை மற்றும் நரி போன்ற மிருகங்கள் உட்கொண்டால், ஒவ்வொரு ஹைடாடிட் சிஸ்டிலிருந்தும் பல நூற்றுக்கணக்கான எகினோகாகஸ் கிரானுலோசஸ் புழுக்கள் அவைகளின் குடலில் உற்பத்தியாகின்றன.

நாய்கள் தெருப் புழுதியில் புரளும் போது இப்புழுவின் முட்டைகள் நாயின் தோலில் ஒட்டிக் கொள்கின்றன. இந்த நாயுடன் மனிதர்கள் விளையாடும் போது மனித உடலுக்குள்ளும் இம்முட்டை சென்று, மனித உறுப்புகளில் ஹைடாடிட் சிஸ்டாக வளர்ச்சி அடைகிறது. ஒரு மனிதனின் உடலில் உள்ள ஹைடாடிட் சிஸ்ட் 50 சென்டிமீட்டர் விட்டம் (20 அங்குலம்), அதில் மூன்றரை காலன் நீரும் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

உணவிற்காகக் கொல்லப்படும் 16 முதல் 18 சதவீத ஆடு, மாடுகளின் ஈரல், நுரையீரல்களில் இந்த ஹைடாடிட் சிஸ்டுகள் காணப்படுகின்றன. இவைகளை நாய், பூனை, நரி முதலிய மிருகங்கள் தின்னாமல் அழித்துவிடும் முறை இறைச்சியைப் பரிசோதிக்கும் கால்நடை மருத்துவர்களால் கையாளப்படுகிறது. இறைச்சிப் பரிசோதனை செய்யப்படாத இடங்களில் இதன் தொல்லை அதிக அளவில் இருக்க வாய்ப்புண்டு.

நாய், பூனை முதலியவைகளைச் செல்லப் பிராணிகளாக வளர்ப்போர், அவைகளுக்குக் குடற்புழு நீக்கும் மருந்தைக் கால்நடை மருந்தகங்களில் கொடுத்தும், வேக வைக்காத இறைச்சியை அவைகளுக்குக் கொடுக்காமல் இருந்தவாறும், இறைச்சிக்காக ஆடு, மாடுகளை வெட்டுமிடத்தில் நாய்களை அண்ட விடாமல் செய்தவாறும் இந்தப் பயங்கரமான வியாதியைத் தடுக்கலாம். ஆடுகளின் ரோமங்களிலும் இப்புழுவின் முட்டைகள் ஒட்டிக் கொண்டிருக்கலாமாதலால் ஆடுகளை வளர்ப்போரும் எச்சரிக்கையாக இருத்தல் அவசியம்.

மாதவரம்,
சென்னை–51. டாக்டர் ஆர். நடராஜன்
இணை இயக்குனர்,
கால்நடை பராமரிப்புத் துறை.



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

ஒவ்வொரு இல்லமும்
விரும்பும்-ரஸ்னு

## அற்புதமான ஒரு பொட்டலம் ரஸ்னுவைக் கொண்டு 32 டம்ளர் சுவைமிக்க குளிர் பானத்தைத் தயாரிக்கலாம்.

அது மிகவும் சுலபம். ஒரு குழந்தைகூட அந்த தந்திரத்தைச் செய்துகாட்டலாம். நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் சர்க்கரை மற்றும் நீருடன் ரஸ்னுவைக் கலக்குங்கள். நிமிடங்களில் பானம் தயார். 32 டம்ளர் சுவைமிக்க குளிர்பானம் தயாரிக்க 2 பாட்டில்கள் சிரப் போதும். இதை இதர எந்த சிரப்/ஸ்குவாஷுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றவைகளைவிட ரஸ்னுவுக்கு பாதி விலைதான் ஆகிறது என்பதை உணர்வீர்கள்.




**ரஸ்னு**

ஸாஃப்ட் ட்ரிங்க்
கான்ஸன்ட்ரேட்
சுவையானது!
சிக்கனமானது!

Mudra/PI/982 TAM

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ், அசர்வா, அஹமதாபாத் 380 016.

இவ்விடங்களிலும் கிடைக்கிறது: குவைத், துபாய், பெஹ்ரீன், மொரீஷியஸ், கெய்ரோ, கார்டூம், லூஸாகா, நெய்ரோபி, ஜெத்தா, ஓஸ்லோ, லண்டன்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka